# செட்டிநாடு

திங்கள் இருமுறை
சமய வளர்ச்சி, மொழியாக்கம் கருதி உழைப்பது.
மலர்-26] துன்முகி-ஐப்பசி-23 8-11-56 [இதழ்-2
ஆசிரியர்:- பாலகவி இராமநாதன் செட்டியார்



உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

ஒவ்வொரு இரண்டாவது நான்காவது
வியாழக்கிழமைகளில் வெளிவரும்.




## பாலை

பரத்தையிற் பிரிந்து மீண்டுவந்த தலைவன் தலைவியின் ஊடலைத் தணிக்கும்பொருட்டுத் தூதாக விடுத்த வாயிலவரைத் தோழி நெருங்கி மறுத்துக் கூறியது.

குரும்பை மணிப்பூட் பெருஞ்செங் கிண்கிணிப்
பாலார் துவர்வாய்ப் பைம்பூட் புதல்வன்
மாலைக் கட்டின் மார்பூர் பிழிய
வவ்வெயி றொழுகிய வெவ்வாய் மாணகைச்
செயிர்தீர் கொள்கைநம் முயிர்வெங் காதலி
திருமுகத் தலமருங் கண்ணிணைந் தல்கலும்
பெருமர வள்ளியிற் பிணிக்கு மென்னார்
சிறுபல் குன்ற மிறப்போ
ரறிவார் யாரவர் முன்னி யவ்வே.

:-எயினந்தைமகன் இளங்கீரனார்.

குரும்பை போன்ற மணியை உடைய பூணுகிய பெரிய செவ்விய கிண்கிணியையும், பால் பொருந்திய சிவந்த வாயையும், மற்றும் பசிய கலன்களையுமுடைய புதல்வன் மாலை அணிந்த மார்பில் ஊர்ந்து இறங்குதலால் அழகிய எயிற்றிலிருந்து ஒழுகிய விருப்பமிக்க மாட்சியுடைய நகையையும், குற்றமற்ற கொள்கையையும் உடைய நமது உயிர்போன்ற ஆசைமிக்க காதலியினது அழகிய முகத்திலே உலாவுகின்ற கண்கள் துன்புற்று நாடோறும் பெரிய மரத்தைச் சுற்றிய வள்ளிக் கொடியைப்போலப் பிணிக்குமென்று கருதாதவராய்ச் சிறிய பல குன்றுகளைக்கடந்து செல்லுவார். அவர் கருதி இருப்பவற்றை அறிபவர் யார்?




# அறிவும் திருவும்

செல்வி, வயிநாகரம்.

இராம. மீனாட்சி

தேவகோட்டை கந்தர் சஷ்டி விழாவில் 2-11-56ல் பேசியது.

சிவநெறிச் செல்வர்களே! செல்விகளே! வணக்கம்.

கந்தர்சஷ்டி விழாச் செயற்குழுவினர் 'அறிவும் திருவும்' என்னும் பொருள்பற்றிப் பேசும்படி எனக்குக் கட்டளை தந்தார்கள். அறிவாலும் திருவாலும்சிறந்துள்ள உங்கள் முன்னிலையில், அவ்வறிவையும் திருவையும் வழங்கி ஆட்கொள்ளுபவரான முருகப்பெருமானது திருவருளைத் துணையாகக்கொண்டு பேசுதற்கு முற்படுகின்றேன்.

உலகத்திலே உள்ள உயிர்த்தொகுதிகள் அனைத்திற்கும் அறிவையும் திருவையும் ஆண்டவன் வழங்கியிருக்கின்றான். ஆனால் அனைத்துயிர்களிடத்திலும் அவைஒரேபடித்தானவையாக அமைந்திருக்கவில்லை. உடல் கொண்டு பிறக்கின்றஉயிர்கள் நால்வகைத்தோற்றம், எழுவகைப்பிறப்பு எண்பத்துநான்கு நூறாயிரம் யோனி பேதங்களுக்கு உட்படுகின்றன என்று பெரியோர் கூறுவர்.

'அண்டசம் சுவேதசங்கள் உற்பிச்சம் சராயுசத்தோடு எண்டரு நாலெண்பத்து நான்குநூறாயிரத்தால், உண்டுபல் யோனியெல்லாம் ஒழித்து மானுடத்துதித்தல், கண்டிடிற் கடலைக் கையால் நீந்தினன் காரியங்காண்' என்பது சிவஞானசித்தியார். மரம், செடி, கொடிகளிலிருந்து மனிதர்வரை காணப்பெறுகின்ற உயிர்த் தொகுதிகளின் அறிவுநிலை, படிப்படியாக உயர்ந்திருப்பதை நாம் அறிவோம்.

உயிர்களின் அறிவுக்குக்கருவியாயிருந்து உதவுவன பொறிகள். அவற்ருல் அறியும் அறிவைப் புலமென்று சொல்லுவர். இவையிரண்டையும் தொடர்புபடுத்திப் பொறிபுலன்கள் என்று வழங்குவதுண்டு. பொறிகளைவடமொழியில் இந்திரியங்கள் என்று சொல்லுவார்கள். புலங்களைத் தன்மாத்திரைகளென்றுரைப்பர். சித்தாந்த சைவ நூல்கள் ஆன்ம தத்துவம் இருபத்து நான்கு எனக் கூறும். அவை பூதங்களைந்து, தன்மாத்திரைகளைந்து, கன்மேந்திரியங்களைந்து,ஞானேந்திரியங்களைந்து, மனம், அகங்காரம், புத்தி, பிரகிருதிஆகிய நான்கு என்பனவாம்.

இவற்றுள் ஞானேந்திரியங்களென்பன அறியும்பொறிகளும், கன்மேந்திரியங்களென்பனதொழில் செய்யும்பொறிகளுமாம். அறிவுப் பொறிகளான மெய்,வாய்,கண், மூக்கு, செவிகளால் உற்றும், உண்டும், கண்டும், உயிர்த்தும், கேட்டும் அறிகிறோம். ஆகவே பொறிகளாகிய கருவிகள் கொண்டுதான் உயிர்கள் எவற்றையும் அறிகின்றனவென்பது விளங்குகின்றது. இப்பொறிகளில் ஏதேனும் ஒன்ரோசிலவோ ஒரு சில உயிர்களுக்குக் குறையாக இருந்தால்அப்பொறி கருவியாக விளங்குகின்ற அறிவும்அவ்வுயிர்களுக்குஇல்லையாகிவிடும் என்பது உணரப்பெறும். அதனுலேயே மரம்முதல் விலங்குவரை உள்ள உயிர்களைப் பொறியுண்மை அடிப்படையில் வைத்து ஐந்துவகையாகப்பிரித்துக் கண்டனர் நம்முன்னோர். 'மெய்வாய மூக்கு நாட்டஞ் செவிகளின், ஒன்றுமுத லாக்கிழ்க்கொண்டுமே லுணர்தலின், ஓரறி வாதியாவுயிரைந் தாகும்' என்பது நன்னூற்சூத்திரம்.

புல்லும் மரமும் முதலியனஉற்றறிவதாகிய ஓரறிவைபட்டும் உடையன. இப்பியும் சங்கும் முதலியன உற்றும் உண்டும் அறியும் இரண்டறிவைஉடையன. கறையானும் எறும்பும் முதலியன உற்றும் உண்டும் உயிர்த்தும் அறியும் மூன்றறிவை உடையன. தும்பியும் வண்டும் முதலியன உற்றும், உண்டும், உயிர்த்தும், கண்டும், அறியும் நான்கு அறிவை உடையன. மக்களும், விலங்கு, புள் முதலியனவும் உற்றும், உண்டும், உயிர்த்தும், கண்டும், கேட்டும் அறியும் ஐந்து அறிவை உடையன.

ஞானேந்திரியங்கள் கருவியாக அறியும் இவ்வைவகை அறிவும் பறவை விலங்குகளோடொப்ப மனிதனுக்கும் இருப்பதனால், அவற்றைவிட அவன் உயர்ந்தவன் ஆதலுக்கு அவனிடம் அமைந்திருக்கின்ற பகுத்தறிவே காரணமாயிருக்கின்றது இதனாலேயே கம்பநாட்டாழ்வார் 'தக்க வின்ன தகாதன வின்ன வென்றொக்க வுன்னல ராயினு யர்ந்துள மக்களும் விலங்கே' என்று கூறினர்.

மற்றை உயிரினங்களிலிருந்துபிரித்தெடுத்து மனிதனை உயர்ந்தவனாகச் செய்கின்ற பகுத்தறிவுமனம் கருவியாக நிகழுவதாகும். மனத்தால் நினைக்கும் ஆற்றல் மனிதனுக்கு இருப்பதனாலேயே 'மன்' என்ற பகுதியினடியாகப்பிறந்த மனிதன் என்ற பெயர் அவனுக்கு உரியதாக ஆயிற்று. இதுகாறும் கூறியவற்றால் ஐம்பொறிகளின் வாயிலாக அறியும்அறிவைவிட மனதைக் கருவியாக வைத்து அறியும் பகுத்தறிவு சிறந்ததென்பது நன்கு பெறப்படும்.

இனி இவ்வறிவின் இன்றியமையாமை பற்றிக் கல்வி கேள்வி முதலிய அதிகாரங்களில் காரணகாரியப் பொருள் படவும் அறிவுடைமை என்ற அதிகாரத்தில் தூலமாகவும் மெய்யுணர்தல் முதலிய அதிகாரங்களில் சூக்குமமாகவும் திருவள்ளுவர்வற்புறுத்தியிருப்பதை இங்கே நினைவூட்டவிரும்புகிறேன். 'சென்றவிடத்தாற் செலவிடா தீதொரீஇ நன்றின்பால் உய்ப்பது அறிவு' எனவும் 'எப்பொருள் யார் யார்வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு' எனவும் 'எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு, அவ்வது உறைவது அறிவு' எனவும் உள்ள திருக்குறள்கள் இடையீடின்றி நமது நினைவிலிருக்க வேண்டியனவாகும்.

எதிர்காலத்தைப்பற்றியறிந்துநடக்கின்ற இயைபு அறிவுடையவர்களுக்கே அமையும். வேறெதுவுமில்லாதவராயினும் அறிவுடையார் எல்லாம் உடையவராவர். பிற அனைத்தும் உடையவரேனும் அறிவில்லாதவர் எதுவும் இல்லாதவரேயாவர். அறிவு அனைத்தையும் படைத்துக் கொள்ளுதற்கும், காப்பாற்றுதற்கும் கருவியாயிருந்து பயன்படுதலின் அதிற் சிறந்தவொன்று பிறிதில்லையென்று ஆன்றோர் கூறினர்.

இனி அவ்வறிவைப் பாசஅறிவென்றும், பசு அறிவென்றும், பதியறிவென்றும் மூவகைப்படுத்திச் சைவசித்தாந்த நூல்கள் கூறும் உண்மையும் இங்கே சிந்திக்கத் தக்கது. உலகத்தைப் பற்றி அறியும் அறிவே பாசஅறிவாகும். சித்தும் சடமுமாகக் கூடியுள்ள இவ்வுலகத்தில் தாமே இயங்குவன சித்துப் பொருள்கள். பிறர் இயக்கஇயங்குவன சடப்பொருள்கள். புறக்காட்சியில் சடப்பொருள்களைத்தான் காணமுடியும். சித்துப் பொருள்கள் புறக் காட்சிக்கு வரா.

சித்துப் பொருள்கள் சடப்பொருள்களிற் கலந்து அவையேயாய் நிற்பது இயல்பு. ஒற்றுமை நயத்தின் ஒன்றெனத் தோன்றிலும், வேற்றுமை நயத்தின் வேறே உடலுயிர்' என்பார் பவணந்திமுனிவர். சடங்களாகிய புறக்காட்சிப் பொருள்கள்பற்றி அறிகின்றவரையே இக்காலத்துப் பெரும்பாலோர் அறிஞர் என்று மதிக்கின்றார்கள். சித்துப்பொருளாகிய உயிரைப்பற்றி அறிந்தவர் சடப்பொருள் அறிஞர்களைவிட ஒருபடி உயர்ந்தவரென்பதும் சத்தும் சித்தும்ஆனந்தமுமாகிய இறைவனைப் பற்றி அறிந்தவர் இவ்விருவரினும் மேம்பட்டுவிளங்குபவரென்பதும் உணரத்தக்கனவாகும்.

அறிவே திருவுக்கு அடிப்படையாயிருந்து உதவுமென்பதை 'நுண்ணுணர் வின்மை வறுமையஃதுடைமை,பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம்'என்று நாலடியார் அறிவிக்கின்றது.

திரு, என்பது உலகியலிற் பொருட்செல்வத்தையும், இறையியலில் முத்தியையும் குறிக்கும்.உலகியலறிவு உலகியற்றிருவைப் பெறுதற்குத் துணை செய்வதுபோல் இறையியலறிவு என்று சொல்லப்படுகின்ற சிவஞானம் இறையியற்றிருவாகிய முத்தியைப் பெறுதற்கு வழிசெய்துதரும். இந்தச்சிவஞானமே திருவள்ளுவர் பெருமானால் 'மெய்யுணர்வு' என்று குறிக்கப்பெறுவதாகும். இதனை, 'கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார்தலைப் படுவர், மற்றீண்டு வாராநெறி' என்ற திருக்குறளால் அறியலாம்.

திரு என்ற சொல்லுக்குக் கண்டாரால் விரும்பப்படுவது என்று பொருளுரைத்தார் பேராசிரியர். உலகியலில் அந்தத் தகுதியை யுடையது பொருட்செல்வமாதலின் அதனைத் திரு

என அழைத்தார்கள். 'பொன்னுமெய்ப்பொருளுந் தருவானைப் போகமும்திருவும் புணர்ப்பானை' என்பது நம்பியாரூரர் திருவாக்கு. இங்கு பொன்னென்று உலகத்திருவும் மெய்ப்பொருளென்று அருட்டிருவும் குறிக்கப் பெற்றுள்ளன. அதனாலேயே உலகத்திருவின் பயனாகக்கிடைக்கின்ற போகம் முதலாவதாகவும், அருட்டிருவின் பயனாகக்கிடைக்கின்ற முத்தித்திரு இரண்டாவதாகவும் கூறப்பெற்றன. முத்தித்திருவை மோட்சஸ்ரீ என்று வடமொழியில் உரைப்பர்.

அம்முத்தித்திருவைச் சென்றடையாத திருவென்று ஆளுடைய பிள்ளையார் அருளுவார். எனவே சென்றடைகின்றதிரு உலகத்திரு என்பது புலப்படும். சென்றடையாததிரு என்பது உயிர்கள் தாமாகச் சென்றடைய முடியாததிரு என்னும் பொருளில் உள்ளது. ஆண்டவனது திருவருள் கூட்டினாலன்றி அத்திருவை அடையமுடியாது என்பது கருத்து.

'அவனருளே கண்ணாகக்காணினல்லால்' என்ற தேவாரமும் 'காட்டுந் திருவருளே கண்ணாகக் கண்டுபர, வீட்டின்ப மெய்ப்பொருளை மேவுநாளெந்நாளோ' என்ற தாயுமான அடிகள் திருவாக்கும் இங்கே நினைவு கொள்ளற்பாலனவாம். உலகத்திருவையும் முத்தித்திருவையும் பெறுவதற்கு அடிப்படையாயிருந்து உதவினாலன்றி அறிவினால்எதும் பயனில்லை

அறிவு அதனளவில் நின்று அறிஞர் என்று பெயர் வாங்கித் தந்தால்மட்டும் போதாது என்பதை 'கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன் நற்றாள்தொழாஅர் எனின்' என்ற குறளில் குறிப்பாலுணர்த்தியருளினார் திருவள்ளுவர். உயிர்களுக்கு இயல்பாய் அமைந்த இயற்கையறிவும் கல்வியால் வருகின்ற செயற்கையறிவும் ஆண்டவனது திருவடியை அடைதற்குத் துணை செய்யாதபொழுது அவற்றால் பயனில்லை என்பதை இதனாலறிகின்றோம். பிறவிப் பெருங்கடலில் நீந்திப் பேரின்பக் கரையை அடைதற்கு இறைவனடி சேர்தலே ஏற்றதெனக் கடவுள் வாழ்த்தின் இறுதிக்குறள் அறிவிக்கின்றதாதலின் தாள் தொழுதலால் வரும் பயன் முத்தித்திருவே என்பது பெறப்படுகின்றது. மக்களுக்கு வாய்த்துள்ள அறிவு அதன் பயனாகிய இருவகைத்திருவையும் அடைதற்குத் துணையாயிருந்து உதவும்படி கருணை புரியும் வண்ணம் கந்தப்பெருமான் கழலிணைகளைத் தொழுது இம்மட்டில் அமைகின்றேன். நலம்பெருகுக.

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

தமிழ் வழிபாட்டை ஆதரிப்பவருட் பலர் கட்சிகளுக்கும்' இயக்கங்களுக்கும் இரையாகித் தம் ஆதரவைத் தெரிவிக்க முன் வருவதில்லையென்பது மெய்யானல் அவ்வழிபாட்டை யெதிர்ப் பவருள்ளும் அங்ஙனமே இரையாகித் தம் எதிர்ப்பதைத் தெரி விக்க முன்வராதவருமுளர். அதுவும் மெய்யே. இருசாரிலு முள்ள அப்பதுங்கிகள் வன்மைபெற்று முன்வருங்காலத்தில் வரட்டும். நவீனரோ கட்சிகளிலும் இயக்கங்களிலுஞ் சேரா தவரெனத் தெரிகிறது. அப்படிப்பட்ட எதிர்ப்பாளருக்கும் பஞ்சமில்லை. உண்மையைத் தெரிவதற்கு அவ்விருதிறத்தினரின் வாதப்பிரதிவாதங்களே போதும். ஆனல் நவீனருக்குத் தமிழ் மொழியே சைவசமயம். எதிர்ப்பாளருக்குச் சைவசமயம் முற் பட்டும், தமிழ் அதைச்சார்தமிருக்கும். அவ்வேறுபாடு அறிஞ ரின் கவனத்துக்குரியது.

'(பகவத்கீதையை) வடமொழியிலே ஓதினல் தான் சில பேருக்கு மனநிறைவு உண்டாகிறது. அவர்களுக்கு வட மொழி சுட்டுப்போட்டாலும் தெரியாமல் இருக்கலாம். எனவே அந்த மொழியைச் சரிவர உச்சரிக்கவும் அவர்களால் முடியாது இருக்கும் என்றாலும், வடமொழி, அரபு இந்த மொழிகள் தாம் மதத்திற்கு உரிய மொழிகள் என்றும் அந்த மொழிகளில் இருக் கும் எதையும் பொருள்தெரியாமல் சொன்னாலும் அது சிறப்புத் தரும் என்றும் ஒரு தவறான மனப்போக்கு உண்டாகிவிட்டிருக் கிறது. இது குருட்டுப்பற்று மூடநம்பிக்கைஎன்பதுஎன்கருத்து' (24-4-56 தமிழ்நாடு) என்று விநோபா சொன்னார் என்கிறார் நவீனர். சொல்லும் பொருளுஞ் சேர்ந்ததே நூல். நூலாசிரியன் அவ்விரண்டற்கு முரியன். உயர்ந்த நூலில் சொல்லழகும், பொருட் செறிவுமிருக்கும். அச்சொல்லும் பொருளுமே சக்தி வாய்ந்தன. பொருளைத் தம்தம்மொழியிற் பெயர்த்துக் கொண்டு

போய் வைத்துப்படித்து மகிழ்வார் சிலர். ஆனால் அந்நூலாசிரிய னது சொல்லையும் படித்து அதனழகை ரசிக்கவோ, சக்தியை வியக்கவோ, பிறபயனையடையவோ கூடாதா? அஃதவசிய மன்றோ? பொருள் தெரியாமல் சொல்லை ரசிப்பதெப்படி யென்பர் சிலர். அர்த்தமே யில்லாத குழலோசை யாழோசைகளை ரசிக்கும் போது, அவற்றால் நோய்நீக்கம், புதியவூக்கம் முதலிய நலன்க ளைப் பெறும்போது அர்த்தந்தெரியாத சொல்லொலியை ரசிக்க வும் அதனால் நலம்பெறவும் முடியாதென்பது ஒப்பத்தக்கதன்று. தீந்தமிழ், களிதெலுங்கு, கவின்மலையாளம் என மொழிகளை வர் ணிப்பதிலும் பயனில்லை. நல்ல நூலாசிரியன் தன் கருத்துக்க ளைச் செறித்துச் சொற்களைச் செவ்வையாகக் கோத்திருப்பான். அந்நூலைப் படிப்பவர் முதலில் அச்சொல்லழகில் ஈடுபடட்டும், பிறகு அவரை அப்பொருளே தன்பால் ஈர்த்துக்கொள்ளும் என்பது அவன் நோக்கமாகும். மற்றொரு தலைசிறந்த நூலாசிரி யன் தன்குறிக்கோட் பொருளையே கருதி அதனருமையில் தன்னையிழந்து பாடிக்கொண்டே போவான். சொற்கள் அவன் வழிச்சென்று சர்வாலங்காரத்தோடும் சரளமாக அவன் வாயி லிருந்துவெளிவரும். அந்நூலைப் படிப்பவரும் அவன்போன்று முதலிற் பொருளுக்கு வசமாக மாட்டார். அத்துணையாற்றல் அவருக்கிராது. அவரும் அச்சொல்லலங்காரத்தை ரசித்துப் பிறகுதான் பொருளைக் கருதுவார். கண்ணன் வைணவருக்கு வழிபடு கடவுள். அவன் வாய்மொழியே சம்ஸ்கிருதத்தி லுள்ள பகவத்கீதா சுலோகங்கள். அவை வியாசரின் வாய் மொழியென்பதுமுண்டு. அதுவுஞ் சரி. அவரும் விஷ்ணுவின் அவதாரந்தான். அக்கீதைக்குப் பிறமொழிகளிற் பலபெயர்ப்புக்க ளுள. அவற்றுக் காசிரியன்மாரும் கண்ணனும் சமதரத்தினரா? அல்லது அவனருளில் அவர் ஆழ்ந்தவரா? முதலில் அதை யே சிக்க. மூலத்திலும் பெயர்ப்புக்களிலும் பொருளொன்றே யாகுக. அதுகொண்டு அப்பெயர்ப்புக்களின் ஆசிரியன்மார் வாய் மொழிகளும் கண்ணன் வாய்மொழியும் சமமாய்விடுமா? அஃ தொருக்காலுமில்லை. அவன் வாய்மொழி பிரத்தியேக மதிப்புடை யது வைணவருக்கு அது கடவுள் வாய்மொழி. பெயர்ப்புக்க ளெல்லாம் மனிதரின் வாய்மொழிகளே. கீதம் நிறைந்தது கீதை. கீதம் சொல்லுக்கே யன்றிப் பொருளுக்கில்லை. ஆகலின் கீதை

யென்னும் பெயரே சொற்களின் அழகு, ஆற்றல் முதலியவற்றை முன்னிட்டே நாலுக்கு வந்ததென்க. திருவாசகம், திருவிசைப்பா முதலியபெயர்களும் அப்படித்தான்வந்தன. பொருள்பற்றியபெயர்களும் உள. சிவஞானபோதம் சிவஞானசித்தியார் முதலிய பெயர்கள் அப்படி வந்தவை. ஒருவனுக்குச் சம்ஸ்கிருதம் எழுதப் படிக்கமாத்திரந் தெரியுமென வைத்துக்கொள்க. கண்ணன் மேலும், கண்ணன் வாய்மொழி யென்கிற காரணத்தால் அச் சம்ஸ்கிருத கீதைமேலும் அவன் பக்தி மேலிட்டு அப்படிப் பைக்கொண்டு அந்நூலைப் பொருள் தெரியாமலே ஓதிவருவானு யின் அதற்குரிய பலனை அடைவானு? மாட்டானு? மாட்டா னென்கிருர் விநோபா. அது தவறு- நான் இப்படிச் சொல்வதால் பொருள்தெரியவேண்டாமென்பது என் கருத்தென எவரும் எண்ணற்க. இலௌகிக நூல்களில் மூலமாயுள்ளவற்றிலிருந்து பொருள்களைப் புய்த்து வேறுமொழிகளுக்கு எடுத்துப் போய் வைத்துக்கொண்டு மூலங்களிலுள்ள சொற்களை உதறி விடலாம். அதிற் குற்றமில்லை. ஆனுல் தெய்வநூல்கள் விஷயத்தில் அப்புத்தி கூடாது. திருவாசகத்திலுள்ள பொருளை வசனத்தில் எழுதியோ, வேறு மொழிகளில் பெயர்த்தோ வைத்துக் கொண்டு அந்நூற்பாடல்களை உதறிவிடுவது மன்னிக்கமுடியாத குற்றம். சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து (உணராவிட்டாலும்) அப்பாட்டையே சொல்லவேண்டும். நவீனர் கூட்டு வழிபாடு நடத்துகின்றனர். அதில் சிவபுராணம் ஓதுவார்க்கெல்லாம் அதன் பொருள் தெரியுமா? பெரும்பாலோர்க்குத் தெரியாது. அங்ஙனமாயின் அவ்வழிபாடு ஏன்? திருவாய்மொழித் தமிழ்ப் பாடல்களைத் தெலுங்கெழுத்தில் அச்சிட்டுப் புத்தகமாக்கி ஆந்திர வைணவர் ஓதிவருகின்றனர். அது பயனற்றசெயலா? நவீனரே பொருளைவிடச் சொல்லுக்கு மதிப்பு வைப்பது முன்சொல்லப்பட்டது. 'எந்த இலக்கியத்தைப்படித்தாலும் முதலில் மூலத்தையே படியுங்கள். ஒன்றுக்குப்பல முறை படித்தால் தானே நன்கு புரிந்துவிடும். மூல ஆசிரியரை நாம் அணுகாது உரை ஆசிரியரை நாம் அணுகிச்செல்வதனுல், நாம் அங்கு மூல ஆசிரியனது கருத்துக்களைக் காணமுடியாது

(தொடரும்)



உ
சிவமயம்
பாலருவாயர் துணை

'அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறை நிற்கும் நிறைந்து'

சந்தா:
உள்நாடு ரூ—3
வெளிநாடு ரூ–6

# செட்டிநாடு

துன்முகி ஐப்பசி-23

## திருக்கார்த்திகை

சிவபரம் பொருளின் பேராற்றலும் பேருளும் புலப்படுகின்ற திருநாள் கார்த்திகைத் திருநாளாகும். அவரது அருள் விளக்கத்தைக் கார்த்திகை விளக்கீடு காட்டுகின்றது. ஆற்றல் வியாபகம் முதலிய வற்றை அவ்விளக்குகளின் வரிசையும் ஒளியும் அறிவிக்கின்றன

பிரமன், திருமால், உருத்திரன் ஆகிய மூவரும் தன்னுடைய சந்நிதியில் படைத்தல், காத்தல், அழித்தலாகிய முத்தொழில்களையும் செய்துகொண்டிருக்க அவர் அவற்றைச் செய்தற்குரிய வல்லமையை நல்கி வாளா இருக்கின்றவர் பரமசிவம். 'மூவண்ணல் தன்சந்நிதி முத்தொழில் செய்ய வாளாமேவு அண்ணல்' என்பார் பரஞ்சோதி முனிவர்.

பிரகிருதி சம்பந்தமான உலகத்தைப் படைத்துக் காத்து ஒடுக்கு கின்றவரைப் பரம்பதி என்று சொல்லுவது பொருந்தாது. மூலப்பிரகிருதிக்கு அப்பாற்பட்டிருக்கின்றதத்துவங்களைக் கடந்துநிற்கும் சிவபெருமானை மறந்து தாமே பெரியவரென்று திருமாலும் பிரமனும் ஒருகாலத்தே தருக்குற்றனர். அவரதுதருக்கை யொழித்து அவரும் நாமும் வாழ ஆண்டவன் ஆரழலாம்- அருணகிரி

யாய் வெளிப்பட்டநன்னுள் திருக்கார்த்திகைநாளேன்பது நாமறிந்ததே. அந்தப்பெருநாள் **18-11-56**ல்விளக்கிட்டுப் பேறடைதல் நமதுகடமை.

# நாவலர் பெருமான்

சைவசித்தாந்த ஞானபாநுவாய் யாழ்ப்பாணத்து நல்லூரில் தோன்றிக் கைம்மாறு கருதாது பேருதவி புரிந்திருந்த ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் பெருமானது திருநாள் கார்த்திகை மாதத்து மகநாளாகும். அந்நாள் **25-11-56** ஞாயிற்றுக்கிழமை யேன்பதை அன்பர்களுக்கு நினைவூட்ட விரும்புகிறேம். சைவநூல்கள், தமிழ்நூல்கள் பல வற்றைப் பரிசோதித்து அச்சிற் பதித்து வெளியிட்டும் புத்துரை செய்து வழங்கியும் எல்லையில்லாத உபகாரஞ் செய்துவைத்த நாவலர் பெருமானுக்கு நாம் செய்யும் கைம்மாறு யாது உளது? அவரை வாழ்த்தி வணங்குவதையேனும் செய்ய வேண்டுமேல்லவா?

# சொக்கலிங்க ஐயா

நாவலர் பெருமானது நன்மாணவராய்த் தனவணிகநாடு செய்த தவப்பயனுல் வந்து தோன்றிய ஸ்ரீலஸ்ரீ சொக்கலிங்க ஐயா அவர்களை, அவர்களதுநினைவுநாளாகிய **27-11-56** (கார்த்திகை உத்தரம்)ல் சிந்தித்து வந்தித்தல் வேண்டும்.

நாவலர் பெருமானுக்குப்பின் நாட்டில் முளைத்து மண்டிய புறச்சமயக்களைகளைப் பிடுங்கிச் சைவப்பயிர் தழையப் பணிபுரிந்த பெருந்தகையார் சொக்கலிங்க ஐயா. இவர்கள் நம்மைவிட்டுப் பிரிந்து சென்று இருபத்தாறு ஆண்டுகளே ஆகின்றன. பதினெட்டாவது வயதிலேயே சிவதீட்சைபெற்றுச் சிவபூசை எழுந்தருளச் செய்து கொண்ட இவர்கள், எழுபத்தைந்தாவது வயதில் தமது வாழ்நாள் நிறைவுற்றவரை சைவசீலமும் சிவபூசையும் வழுவுறுது சிவபரத்துவ நிருபணஞ்செய்து சிறந்திருந்தார்கள். ஏராளமான செய்யுள் நூல்களையும் உரைநடை நூல்களையும் இவர்கள் நமக்கு வழங்கியிருக்கின்றுர்கள். இவர்களை இவர்களது திருநாளில் ஏத்தி இன்புறுவோமாக.

# படித்தோம்!

விஞவெண்பா விடை விளக்கக் கட்டுரை: திருவாவடுதுறை ஆதீன வெளியீடு.எண் 102. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் கட்டளையிட்டருளியபடி ஆதீனவித்துவான் தே ஆ ஸ்ரீநிவாஸா சாரியர் அவர்களால் எழுதப்பெற்று 14-10-56ல் திருவெண்ணெய்நல்லூரில் நடைபெற்ற சித்தாந்த சைவ ஐந்தாவது மாநாட்டு மலராக வெளியிடப்பெற்றது. சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் ஒன்ருகிய விஞவெண்பா, மற்றைச் சாத்திரங்களின் பொருள்களை விஞவி நிற்பதாதலின் அதற்கு ஓர் நல்ல விளக்கக் கட்டுரை வேண்டுமென்று திருவுளங்கொண்டு இவ்வெளியீட்டை உபகரித்தருளிய மகாசந்நிதானம் அவர்களுக்கு நாம் எழுமையும் கடமைப்பட்டுள்ளோம்.

அங்கங்களின் பயன்: வெளியீடு சொ நா காரைக்குடி. தொகுப்பும் உரையும் ராப சொ காரைக்குடி. முத்துப்பட்டினம் கலைச் செல்வி சொ நா சரசுவதியின் திருமண அன்பளிப்பு. திருவள்ளுவர் முதல் சேந்தனூர்வரை முப்பத்திரண்டு ஆசிரியன்மார்களின் திருப்பாடல்கள் நாற்பதை எடுத்துத் தொகுத்துத் தலைமுதலாகிய அங்கங்கள் இறைவனைத் தொழவே, அவனுற் படைக்கப் பெற்றன என்பதை வலியுறுத்தி நிற்கிறது இவ்வெளியீடு.

### சென்னை

சென்னையில் பயிலும் நகரத்தார் மாணவர்களிடையே சிறந்த ஒற்றுமையை விளைவித்துச் சமூகத்தின் நலத்திற்காகப் பாடுபட வேண்டும் என்ற நோக்கத்துடன் துவக்கப்பட்ட நகரத்தார் மாணவர் சங்கத்தின் துவக்கவிழா சென்னை தசப்பிரகாஷ் ஹோட்டலில் திருவாளர் ராஜா சர் முத்தையா செட்டியாரவர்களால் 28-10-56ந்தேதி நிகழ்த்தப்பெற்றது சென்னை வாழ் பெருமக்களும் மாணவர்களும் திரண்டு வந்திருந்து விழாவைச் சிறப்பித்தனர்.

# இந்தியா: புதிய அமைப்பு




ராஜ்யங்கள் சீரமைப்புச் சட்டம் பீஹார், மேற்கு வங்காள (பிரதேசங்கள் மாற்றம்) சட்டம் ஆகியவைகளின் ஷரத்துக்களின்படி ராஜ்யங்கள் சீரமைக்கப்பட்டபிறகு 1956 நவம்பர் 1ந் தேதியிலிருந்து இந்தியா பின்வரும் 14 ராஜ்யங்கள் அடங்கியதாக இருக்கும்: ஆந்திரப் பிரதேசம், அஸ்ஸாம், பீஹார், பம்

பாய், ஜம்மு-காஷ்மீர், கேரளா, மத்தியப்பிரதேசம், சென்னை, மைசூர், ஒரிஸ்ஸா, பஞ்சாப், ராஜஸ்தான், உத்திரப்பிரதேசம், மேற்குவங்காளம், அதோடு மத்தியசர்க்கார் நிர்வாகத்திலடங்கிய பின்வரும் ஆறு பிரதேசங்களும் இருக்கும். அந்தமான்-நிக்கோபார் தீவுகள், டில்லி, ஹிமாச்சலப் பிரதேசம், லாக்கடிவ்-அமிந்திவ் தீவுகள், மணிப்பூர். திரிபுரா.

ராஜப்பிரமுகர் பதவி இனி ரத்துசெய்யப்பட்டுவிடும்; ராஜ்யங்களில் 'ஏ' 'பி' 'ஸி' என்ற வேறுபாடுகளும் இனிஇருக்காது

ராஜ்யங்களின் விஸ்திரணமும் ஜனத்தொகையும்பின்கண்டவாறு இருக்கும்:-

| ராஜ்யம் | விஸ்தீரணம் (சதுரமைல்) | ஜனத்தொகை 1951ம் வருஜனகணிதப்படி |
|---|---|---|
| ஆந்திரப்பிரதேசம் | 105,962 | 31,259,815 |
| அஸ்ஸாம் | 85,012 | 9,043,707 |
| பீஹார் | 67,300 | 38,827,517 |
| பம்பாய் | 190,919 | 48.265,120 |
| ஜம்மு-காஷ்மீர் | 62,780 | 4,400,000 |
| கேரளம் | 15,035 | 13,549,118 |
| மத்தியப்பிரதேசம் | 171,201 | 26,095,680 |
| சென்னை | 50,110 | 29.974,936 |
| மைசூர் | 74,347 | 19,401,612 |
| ஒரிஸ்ஸா | 60,136 | 14,645 946 |
| பஞ்சாப் | 47,456 | 16,134,890 |
| ராஜஸ்தான் | 132,078 | 15,946,731 |
| உத்தரப்பிரதேசம் | 113,409 | 62,215,742 |
| மேற்குவங்காளம் | 33,809 | 26,258,647 |

குறிப்பு: பீஹார், மேற்குவங்காளம் ஆகிய ராஜ்யங்களுக்கான புள்ளிவிவரங்கள் உத்தேசமானவையாகும்.

——

# பழைய ஆதரவுகள்

நகரத்தார்களின் தருமபரிபாலன விஷயமாக 1832ம் ஆண்டில் ஏற்பட்ட ஆதரவுகள் மூன்றின் அச்சுப்படிகளைக் காரைக்குடி திரு, மரு. லெ. ராம. காசிச்செட்டியாரவர்கள் தந்தார்கள். அவை தேவகோட்டை மீனலோசனி பிரஸில் 51-500 என்னும் எண்ணுடன் அச்சிடப்பெற்றுள்ளன. பழைய தாள் சிதலமுற்று இருந்ததிலிருந்து எடுத்து இங்கே வெளியிடப் பெறுகிறது :-ஆசிரியர்

[சிவகெங்கை ருஜா கலெக்டருக்கு கொடுத்தமனு. மகா-ா-ா ஸ்ரீ பிரான்சுபால் கலெக்டர் மேஸ்தர் ஹென்ரிவைவாஷ் துரையவர்கள் சமுகத்துக்கு]

சிவகெங்கைசீமை ஜமீன்தார் ருஜாமுத்துவிஜய ரெகுநாத போதகுருசாமிபெரியுடையாத்தேவர் சலாம். நாட்டுக்கோட்டை இளையாத்தகுடி நகரச்செட்டிகள் ஆதியில் தஞ்சைநகரிலாகா காவேரி பூம்பட்டிணத்திலிருந்து வெகுநாளைக்கு முன்னமே நம்முடைய ஜமீன்தாரியிலும் அதற்கடுத்த ருமநாதபுரம் புதுக்கோட்டையிலாக்கா கிருமங்களிலும் வந்திருப்பதில் அவர்கள் குலதெய்வமாகிய நம்முடைய ஜமீன்தாரியிலாகாவில் இளையாத்தக்குடிக்கோவில் க. இரணியூர்க்கோவில், க. பிள்ளையார்பட்டிக்கோவில் க. வ்யிரவன்பட்டிக்கோவில் க. பாத்தூர்க்கோவில் க. இலுப்பக்குடிக்கோவில் க. வேமங்கோவில் க. வேலங்குடியில் கண்டீஸ்வரமுடையார் கோவில் க. சூரக்குடியில்தேசிகவிநாயகர்கோவில் க, ஷெ செட்டிகளுக்கு குருஸ்தானமாகிய பாதரக்குடிமடம் க துளாவூர் மடம் க, மாயாண்டிசெட்டி தனதில் கோட்டூர் நயினர்கோவில் க. காடன்செட்டி தனதில் குன்னக்குடிமடம் க. சுப்பிரமணியஞ்செட்டி தனதில் இடையன்வயல் திருக்குளத்தங்கரையில் பிள்ளையார்கோவில் க. சின்னன்செட்டி தனதில் வேங்காவயல் திருக்குளத்தங்கரையில் பிள்ளையார் கோவில் க. முத்துக்கருப்பன்செட்டி தனதில் சிறுவயல் திருக்குளத்தங்கரையில் பிள்ளையார்கோவில் க. இந்த தர்மங்களுக்கு நம்மிட ஜமீன்தாரி இலாகாவில் நடந்துவருகிற கிருமங்களுக்கு சர்க்காருக்குள்ள பொருப்பு கொடுத்து ஷெ கோவில்கள் மடங்

கள் வகையருக்கள் ஷெ செட்டிகள் விசாரணைசெய்து ஷெகிரா மங்களில் வருமான ஆமிஷங்களுடனே அவாள் சொந்தத்திலி ருந்து சிலபணங்களும்கொடுத்துஷெகோவில்கள் மடங்கள் வகை யருவில் பூசை நைவேதனம் திருப்பணிமண்டபம் கோபுரம் தடாகபிரதிஷ்டைகள் அன்னதானமுதலான தர்மங்கள் நடப்பி வித்து வருவதில் இப்போது இவடம் ஜமீன்தாரியிலாகா தேவஸ் தானம்வகையரு அமல்தார் ஷெ கோவில் மடங்கள் வகையரு வுக்கு மாமூலுக்கு விரோதமாய் மணியம் சம்பிருதிகள் நிய மித்து கணக்கு மற்றது கேள்கிற தாய் ஷெ செட்டிகள் வந்து நம்மிடத்தில் தெரியப்படுத்திக்கொண்டதினாலே பிருக்கு வரு ஷம் வரையில் நடந்துவந்தபடி ஷெதேவஸ்தானம் மடம் வகை யருவுக்கு பொருப்புப்பணத்தை வாங்கிக் கொள்ளும்படியாயும் அதற்கு இப்போது நூதனமாய் நியமித்திருக்கிற மணியம் சம் பிருதி வாங்கிவரும்படியாகவும் யாதொரு கணக்குகள் கேட்டு தொந்திரவு செய்யாமலிருக்கும்படியாயும் ஷெ மடங்க ளில் பூசை படித்தரம் அன்னதானம் வகையரு நாளுக்குநாள் செட்டிகள் விமரிசையாய் நடப்பித்து வரும்படியாயும் ஹெட் தாசில்தாருக்கு உத்திரவாகவேண்டியதாயறிக்கைசெய்துகொண் டோம்.

1832ஸு யேப்ரல்மீ 30உ சிவகெங்கை ருசா. முத்துவிஜய ரெகுநாதபோதகுருசாமி பெரியஉடையாத்தேவர் என்றும். முகாமில் சுப்பிரமணியபிள்ளை ருயசம் என்றும் தமிழில் கையெழுத்துக்கள் வைக்கப்பட்டிருக்கிறது. இது எழுதினது சேஷகிரிருவ் என்றும்.

[வெங்கிடாசலம்செட்டியார் கலெக்டருக்கு கொடுத்த மனு. மதுரை ஜில்லா வகையருவுக்கு பிரான்சுபால் கலெக்டராகிய மகா-ா-ா-ஸ்ரீ மேஸ்தர் ஹென்ரிவைவாஷ் துரையவர்கள் சமு கத்துக்கு]

நாட்டுக்கோட்டை இளையாத்தக்குடி நகரம் செட்டிகள்வகை வெங்கிடாஜலம்செட்டி எழுதிக்கொண்டவிண்ணப்பம்.

(தொடரும்)




# 'குன்றூர்க் குமரனர்'

( சித–சேதுராமன் )

(முன்தொடர்ச்சி)

மாகினி: சேற்றிலே மலர்ந்த செந்தாமரை நீங்கள்!

சாம்: அதோ பார்! வண்ணமலர்கள் வண்டினங்களை வாவென்று அழைக்கும் பான்மையை.

மா: மாலைவேளையிலே-மந்தகாசப்பொழுதினிலே -அவைகள் இன்பத்தைப்பருகுகின்றன [இருவரும் உல்லாசப் பொழுதைப் போக்கி விட்டுப்பிரியாவிடைபெறுகின்றனர்.]

## காட்சி-5

[அந்தப்புரத்தில் ராணி மல்லிகா தூங்கிக் கொண்டிருக்கிறாள். அதுசமயம் குமரனர் அங்கே வருகிறார். விழித்த மல்லிகா குமரனரைக்கண்டு திகிலடைகிறாள்.]

மல்: தாங்கள் இந்நேரத்தில் தனிமையாக......

கும: காரணமில்லாமலா வருவேன். [நெருங்குகிறார்]

மல்: தாங்கள் முற்றும் துறந்த முனிவர்.

கும: நானும் மனிதன்தானே! முற்றும் துறந்ததனால் இன்பத்தையும் இழந்துவிடச் சொல்லுகிறாயா?

மல்: சந்நியாசவேடத்தில் கன்னிவேட்டையாடவந்திருக்கிறீரா? நீர் வெளியே செல்லலாம்.

கும: வெளியே செல்லவா? இதற்காகவா ஓடிவந்தேன், அலட்சியப்படுத்தாதே.

மல்: ஆட்களைக் கூப்பிட்டுவிடுவேன் அகன்றுவிடு.

கும: இந்நேரத்தில் ஆட்கள் எப்படி வருவார்கள்.

மல்: அடத் துரோகி!

கும: ஆஹஹ்ஹா...! இன்பத்தை அளிக்கவந்தவனுக்குப் பெயர் துரோகி. நீ என்னிடமிருந்து தப்பமுடியாது.

மல்: அடப்பாவி; நம்பினவருக்கே மோசம்செய்யும் கொலைகாரா.

[குமரனூர் இன்பத்தைப்பருகிக் கொலையும் செய்துவிட்டு ஓடுகிறார். மறுநாள் அதிகாலையில் தற்செயலாக அங்குவந்த சாம்பவன் குருதிவெள்ளத்தில் மிதந்துகிடந்த ராணியைக்கண்டு கதறுகிறான். ஓடிவந்த வீரர்கள் கைது செய்கின்றனர்.]

காட்சி-6

[அரசவையில் அரசர், குமரனூர், அமைச்சர் முதலானோர் வீற்றிருக்கின்றனர். சாம்பவன் குற்றவாளிக் கூண்டிலே நிறுத்தப்பட்டிருக்கிறான்.]

மன்: (சாம்பவனை நோக்கி) இங்கு ஏன் நிறுத்தப்பட்டிருக்கிறாய் தெரியுமா?

சாம்: (சிரிக்கிறான்.)

மன்: சிரித்தால் தப்பிவிடலாமென்ற எண்ணமா?

சாம்: இல்லை. குற்றம் செய்தவன் வேறொருவனிருக்கப், பழி மற்றொருவனுக்குச் சுமத்தப்படும் விந்தையைக் கண்டு.

மன்: என்ன, குற்றம் செய்தவன் வேறு ஒருவனா? அவன் எங்கே இருக்கிறான்?

சாம்: எங்கேயும் தேடி அலையவேண்டாம். தங்கள் அருகிலே நாசச்செயல்களைச் செய்துவிட்டு உத்தமர்போல் இருக்கும் குமரனூர்தான் அக்குற்றவாளி.

மன்: என்ன குருநாதரையா கூறுகிறாய்—ஒருக்காலுமிருக்காது.

சாம்: ஆம். அவர்தான் உங்களையே மயக்கிவிட்டாரே. அவர் வாக்குத்தான் தங்களுக்குப் பொன்வாக்கு ஆய்விட்டதே.

மன்: நிறுத்து. உண்டவீட்டுக்கு இரண்டகம் செய்யும் உலுத்தனே! சட்டமா பேசுகிறாய்.

சாம்: யார் அரசே, உண்டவீட்டிற்கு இரண்டகம் செய்தவர் குமரனூரா அல்லது நானா. அதிகாலையில் அந்தப்புரத்துப்பக்கம் சென்றபொழுது ராணியை இரத்தவெள்ளத்தில் கண்டு கதறினேன். வீரர்கள் என்னைக் கைதுசெய்தனர். இதுதான் நடந்தது. நான் வேறு ஒன்றுமறியேன்.

கும: நடிப்புப் பிரமாதம். பேசுவதெல்லாம் அத்தனையும் பொய் மன்னவா!

சாம்: ஆம். நான் பேசுவதெல்லாம்பொய்-தாங்கள் பேசுவது தேனினுமினிய தீந்தமிழ்மெய்ச் சொற்கள் போலும்!

மன்: என் குருநாதரைப் பழித்துக்கூறிய இவனைச் சிறையில டைத்து நாளை மறுதினம் தூக்கிலிடுங்கள். [சாம்பவனை வீரர் கள் இழுத்துச்செல்லுகின்றனர்.]

காட்சி-7

[சிறைச்சாலையில் சாம்பவன் நடமாடிக்கொண்டிருக்கிறான்]

சாம்: (தனிமொழி) என்ன உலகம்! நீர்க்குமிழியன்ன இளமை யும்—நெடுந்திரைபோன்ற செல்வமும்-நீரின்எழுத்தாகும் உடலும் என்றும் அழிவுறுவென எண்ணலாமா? காலன் திசைநோக்கி வருந்துநாள் கூடுமுன் வீட்டுநெறியில் உளத்தைப் பதிக்காது இழிசெயல் செய்யும் மனிதனும் ஒரு மனிதனா?

பக்தர்களாம்-பக்தர்கள், பேசுவது எல்லாம்துறவு-நடத்துவ தெல்லாம் தப்புவாழ்க்கை; பகலில் ஆசிரமத்தில் உபதேசம்-இர வில் பாவையர் மனையில் உல்லாசவாழ்வு. ஹூம், நல்லவர்களை ஈன்ற தாயகமே! கடவுள் பெயரைச் சொல்லிக் காலக்ஷேபம் நடத்தும் கயவர்களைப் பார்! காவிஉடையிலே கன்னிவேட்டை யாடும் கபடதாரிகளைப் பார்! பார்!! பார்!!!

ஏ சமுதாயமே!... தன்மானமற்ற சமுதாயமே! நல்லவர்களுக்கு இடமளிக்காது, உள்ளத்தில் கள்ளமும், உதட்டில் வெல்லமும் கொண்டலையும் நயவஞ்சகக்காரர்களுக்குக்-கூட இருந்து கொண்டே குடிகெடுக்கும் நாசகாரர்களுக்கு-சந்நியாச வேடத் தில் சதிச்செயல் புரியும் அக்கிரமக்காரர்களுக்கு இடமளித்தது ஏன்? ஏன்? [மயங்கிக் கீழே விழுகிறான்]

காட்சி-8

[அரண்மனை. மன்னர் இங்குமங்கும் உலாவிக் கொண்டிருக்கி றார். மாகினி ஓடிவருகிறாள்]

மாகினி: தந்தையே!

மன்: என்ன... மாகினியா!

மா: ஆம்; நான்தான். குற்றமொன்றும் செய்யாத அவரை விடு தலை செய்யுங்கள். அவர் நிரபராதி.

(தொடரும்)

## உங்களுக்குத் தெரியுமா?

இந்திய அரசாங்க வர்த்தகக் கார்ப்பொரேஷன் ஸ்தாபனம் இவ்வருஷம் மே மாதத்தில் அமைக்கப்பட்டதிலிருந்து இது வரை முதல் ஐந்துமாத காலத்தில் இறக்குமதி ஏற்றுமதிகளுக்காக மொத்தம் 15.3 கோடி ரூபாய் மதிப்புக்கு ஒப்பந்தங்களைச் செய்துகொண்டிருக்கிறது.

மத்திய சமூக க்ஷேமநல போர்டின்கீழ் நாடு முழுவதிலும் தற்போது மொத்தம் 321 க்ஷேமநல விஸ்தரிப்புத் திட்டங்கள் வேலைசெய்து வருகின்றன.

1953 அக்டோபர் மாதம் ஆரம்பிக்கப்பட்ட ஸ்திரீகளின் சேமிப்பு இயக்கத்தின்கீழ் 1956ஆகஸ்ட் 10-ந்தேதிவரை மொத்தம் 427.08 லட்சம் ரூபாய் வசூலாகியுள்ளது.

கந்தகிகாமிலத்தின் உற்பத்தி 1946-ல் 60,000 டன்னாக இருந்து வந்தது. 1955-ல் 1,65,000 டன்னாகஉயர்ந்து விட்டது.

1955-56-ம் ஆண்டில் இந்திய ரயில்வேக்களின் போக்குவரத்தில் பதின்மூன்று மணி நேரத்துக்கு சராசரி ஒருரயில் எஞ்சின் வீதம் புதிதாக உபயோகத்துக்குக் கொண்டுவரப்பட்டது. புதிதாக போக்குவரத்தில் ஈடுபடுத்தப்பட்ட 668 ரயில் எஞ்சின்களில் 633 எஞ்சின்கள் 'பழசாகிப் போன' எஞ்சின்களுக்குப் பதிலாக உபயோகத்துக்குக் கொண்டுவரப்பட்டவையாகும்.

இப்போது மொத்தம் 101 இந்திய எஞ்சினீயர்களும் தொழில் நுட்ப நிபுணர்களும் மேற்குஜெர்மனியில் பயிற்சிபெற்று வருகின்றனர்.

மேற்கு ரயில்வேயிலுள்ள ஸோன் (தெஹ்ரி) பாலம்தான் (10,052 அடி) இந்தியாவிலுள்ள பிராட் கேஜ் ரயில்பாலங்களிலேயே மிக அதிக நீளமானதாகும்.

இந்தியாவில் சைக்கிள் ட்யூபுகளின் உற்பத்தி 1954-ல் 55,76,991 ஆக இருந்தது 1955-ல் 55,80,488 ஆக அதிகரித்தது.

உ

# செட்டிநாடு

திங்கள் இருமுறை

சமய வளர்ச்சி, மொழியாக்கம் கருதி உழைப்பது.

மலர்-26] துன்முகி-கார்த்திகை-14 29-11-56 [இதழ்-3

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன் செட்டியார்



அத்தி முகவனை, நித்தம் நினைபவர்
சித்தி திருவொடு, முத்தி பெறுவரே

ஒவ்வொரு இரண்டாவது நான்காவது
வியாழக்கிழமைகளில் வெளிவரும்.




பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனைத் தலைவியுடன் எதிர்கொண்ட தோழி, அவனது பிரிவால் வந்த வருத்தத்தைப் புலப்படுத்தி வெகுண்டு கூறியது.

தடந்தாட் டாழைக் குடம்பை நோனாத்
தண்டலை கமழும் வண்டுபடு நாற்றத்
திருள்புரை கூந்தற் பொங்குதுக ளாடி
யுருள்பொலி போல வெம்முனை வருந்த
லணித்தகை யல்லது பிணித்த றேற்றாப்
பெருந்தோட் செல்வத் திவளினு மெல்லா
வெற்பெரி தனித்தனை நீயே பொற்புடை
விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வேந்த ரோட்டிய வேந்துவே னன்னன்
கூந்தன் முரற்சியிற் கொடிதே
மறப்பன் மாதோநின் விறற்றகை மையே. 270

பெரிய தாளையுடைய தாழைப் புதலினாற் கட்டப்பட்ட எமது சிறிய வீட்டில் பொறுக்கமுடியாதபடி சோலைப்பூக்களின் மணத்திற்கு வண்டுகள் மொய்க்கின்ற நறுநாற்றமுடைய இருளொத்த கூந்தலில் மிகுதியான துகள் படியும்படி நிலத்திலே புரண்டு சாய்ந்தாற்போல எம்முன்னே வருந்து தலையுடையளாய் அழகழி தலையல்லாது நின்னை வசப்படுத்த அறியாதிருக்கின்ற பெரிய தோளையுடைய செல்வியாகிய இவளைக்காட்டினும் என்னைப் பெரிதும் நீ அன்புசெய்தொழுகுகின்றாய். அழகுள்ள விரிந்த பிடரிமயிர் பொலிந்த விரைந்த நல்ல குதிரைகளையுடைய பகைவரை யோட்டக் கையிலேந்திய வேற்படையினனாகிய நன்னன் அப்பகையரசாது உரிமை மகளிரது கூந்தலைத் திரித்து யானையினைப் பிணித்தகொடுமையினும்நின்பிரிவு கொடியதாகும். ஆகலின் நினது வலிய தகுதியை மறந்து விடுகின்றேன்.




# அருளும் பொருளும்.

செல்வன்,
**இராம. திருநாவுக்கரசு**

தேவகோட்டை கந்தர்
சஷ்டி விழாவில் 2-11-56ல்
பேசியது.

சிவநெறிச் செல்வர்களே! செல்விகளே! வணக்கம்.

இப்பொழுது அடியேன் உங்கள் முன்னே பேச இருக்கின்ற பொருள் 'அருளும் பொருளும்' என்பதாகும். மக்களாய்ப் பிறந்த ஒவ்வொருவரும் இன்றியமையாது பெறவேண்டியவை இவ்விரண்டுமே: 'அருளில்லார்க்கு அவ்வுலகமில்லை பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லாகி யாங்கு' என்பது திருக்குறள்

அருளுடையாரிடத்துப்பொருளும் பொருள் படைத்தாரிடத்து அருளும் எளிதில் வந்து கூடுவன வாகும். அதனாலேயே இவ்விரண்டனையும் தொடர்பு படுத்திச் சிற்சிலகருத்துக்களை இங்கே வெளியிடக் கருதினேன்.

பொருள் என்பதில் காட்சிப்பொருளும் கருத்துப் பொருளுமாகிய எல்லாம் அடங்கும். இந்திரன் முதலிய இறையவர் பதங்களும் அந்தமில் இன்பத்து அழிவில் வீடும் நெறியறிந்து எய்துதற்குரிய மாந்தர்க்கு உறுதியென உயர்ந்தோரான் எடுக்கப்பட்ட பொருள்கள் நான்கு. அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பன என்பார் பரிமேலழகர் வடமொழியில் தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் என்று சொல்லப்பெறுகின்ற புருஷார்த்தங்களே தமிழில் அறம், பொருள், இன்பம், வீடு எனக் குறிக்கப்பெற்றன.

தமிழ்ச் சான்ருேர்கள் அறம் பொருளின்பம் வீடாகிய நான் கையுமே பொருளில் அடக்கிப் பேசியுள்ளார்கள். பொருளதி காரத்துக்கு இலக்கணம் கூறுகின்ற நச்சினுர்க்கினியர், பொரு ளாவன 'அறம்பொருளின்பமும் அவற்றது நிலையின்மையும்அவற் றினுகிய வீடுபேறுமாம்' என்பார்.

இவ்வாறு பொருளென்னுஞ்சொல் எல்லாவற்றையும் குறிக் கும் இயைபுடையதா யிருப்பினும் உலகியலிற் பெறத்தக்கன வாகிய அறமும் இன்பமும் ஒழிந்த செல்வத்தையே சிறப்பா கக் குறித்துக்கொண்டிருக்கின்றதாதலின், அதனைப் பின்பற் றியே பொருளைச் செல்வமாக அடியேன் இங்கே கொள்ளுகின் றேன்.

அருள் என்பது தொடர்பு பற்ருது இயல்பாக எல்லா உயிர் கள் மேலும் செல்வதாகிய கருணை. அது அன்பிலிருந்து முகிழ்த்து வருவது. அன்பு என்பது வாழ்க்கைத் துணையும், புதல்வரு முதலிய தொடர்புடையார்களிடத்துக் கொள்ளும் காதல். முதலில் தம்மைச் சார்ந்தவர்களிடத்துக் கொண்ட காதல், நாளேற ஏறத் தொடர்பு பற்ருது அனைத் துயிர்களினி டத்தும் சென்று பற்றும். இதனுலேயே 'அருள்' என்னும் குழந்தை அன்பு என்னும்தாயாற் பெறப்படும் என்று திரு வள்ளுவர் கூறினுர்.

எல்லாவுயிர்களிடத்தும் அன்பு செய்கின்ற ஒருவனுக்கு இறைவன்பால் அன்பு செய்வது எளிதில்கைகூடிநிற்கும். 'ஈச னுக்கு அன்பில்லார் அடியவர்க் கன்பில்லார், எவ்வுயிர்க்கும் அன் பில்லார் தமக்கும் அன்பில்லார்' என்று சிவஞானசித்தியார் கூறி யது.

இதில், தம்மைச் சார்ந்தாரிடத்து உண்டாவதாகிய அன்பு இல்லாதபொழுது மற்ற உயிர்களிடத்து உண்டாவதாகிய அருள் இருக்கமாட்டாது. அது இல்லாதபொழுது அடியார்களிடத் துப் பற்றுவைப்பது இல்லையாகி ஆண்டவன்பாற் படுத்துகின்ற

பக்தியும் இல்லாது போய்விடும். என்று சொல்லியிருப்பதுநினைவி லிருத்தத் தக்கதாகும்.

உயிர்களிடத்து வைக்கின்ற இரக்கமாகிய அருள், எல்லா மக்களுக்கும் உறுதியாக வேண்டப் பெறுவதென்பதை எல்லாச் சமயங்களும் ஏற்றுக்கொள்ளுமேனும் சைவசமயத்திற் போல ஆண்டவனருளைப் பெறுதற்கு அது வாயில் என்று அவைகள் சொல்லமாட்டா.

தெய்வப்புலமைத் திருவள்ளுவர் பெருமான் அருளின் இன்றியமையாமையை 'அருளுடைமை' என்ற அதிகாரத்திலும், பொருளின் இன்றியமையாமையைப் பொருள் செயல்வகை' என்ற அதிகாரத்திலும் வலியுறுத்திக்கூறியுள்ளார். இவ்விரண்டு அதிகாரங்களிலுமுள்ள குறட் கருத்துக்களை உற்று நோக்குவார்க்கு இவற்றது தொடர்பு நன்கு தெரியவரும்.

செல்வங்கள் பலவற்றுள்ளும் சிறந்த செல்வம் அருட் செல்வமே. பொருட்செல்வம் இழிந்தவரிடத்தும் இருப்பதாகும். நல்ல நெறியிலே நின்று ஆராய்ந்து அருளுடையராயிருங்கள். எல்லாவற்றாலும் ஆராய்ந்தாலும் துணையாவது அருளொன்றே. இருள்சேர்ந்த துன்ப உலகிற் செல்லுதல் அருள் சேர்ந்த நெஞ்சை உடையவர்களுக்கு இல்லை. உயிர்களைப்பேணி அருளாள்பவர்களுக்குத் தன்னுயிர் அஞ்சுதற்குரிய தீவினைகள் இல்லையாகும். அருளுடையவர்களுக்குத் துன்பம் உண்டாகாது. அதற்கு இவ்வுலகத்தில் வாழ்பவர்களே சான்றாவார்கள். அருளைத் துறந்து கொடுமை செய்பவரைப் பொருளை நீங்கி மறந்தவரென்று உலகம் சொல்லும். பொருளில்லார்க்கு இவ்வுலக இன்பம் இல்லையானாற்போல அருளில்லார்க்கு வீட்டுலக இன்பம் இல்லை. பொருளில்லாதார் ஒரு காலத்தில் அதனை உடையராதல் கூடும்- அருளில்லாதார்என்றும் அது இல்லாதவரேயாவர் என்பன அருள்பற்றித் திருவள்ளுவர்கூறிய அருங்கருத்துக்களாகும்.

பொருளல்லவரையும் பொருளாக மதிக்கச் செய்வது பொருளே. எல்லா நலங்களும் உடையவராயினும் செல்வமில்

லாதவரை அனைவரும் இகழ்வர். அது உடையவரை யாவரும் உயரச்செய்வர். பொருளென்னும் நந்தாவிளக்கு எண்ணிய தேயத்துச் சென்று பகையை யறுக்கும். திறமறிந்து நல்வழியில் ஈட்டப்பட்ட பொருள் அதனின் முன்னதாகிய அறத்தையும் பின்னதாகிய இன்பத்தையும் நல்கும். அருளோடும் அன்போடும் வாராத பொருளீட்டம் கொள்ளத்தக்கதன்று. தானே வந்துற்ற பொருளும்,சுங்கப்பொருளும், பகைவர் திறைப்பொருளுமே அரசர்க்குரியன. அன்புத்தாய் பெற்ற அருட்குழவி பொருளென்னும்செவிலியால் நன்கு வளரும். கைப்பொருளுண்டாகச் செய்பவனது தொழில் குன்றேறி யானைப் போர் கண்டதை ஒக்கும். பகைவர் தருக்கை அறுக்கும் கூரிய படைக்கலமாகியபொருளை அனைவரும் ஆக்கிக் கொள்ளல் வேண்டும். பொருள்படைத்தவருக்கு மற்ற அறமும் இன்பமும் எளிமையானவை என்று பொருள்செயல் வகையில் பொய்யில்புலவர் புகன்றுள்ளார்.

'மேலைத் தவத்தளவே யாகுமாம் தான் பெற்ற செல்வம்' என்பது ஔவையார் திருவாக்கு. தவத்தின் பயனாக வருவது செல்வமாயினும் அது நிலையற்றதென்பதை அனைவருமறிவர். 'ஆறிடு மேடும் மடுவும் போலாம் செல்வம்' என்பது அறநல்லுரை. நிலையற்றதாகிய உடம்பைத் துணைக்கொண்டு நிலையுற்றதாகிய முத்தியின்பத்தைஅடைதல் அறிவுடைமை அல்லவா? அதுபோலவே நிலையற்றதாகிய பொருளைக் கருவியாகக் கொண்டு நிலையுற்றதாகிய அருளையடைய முயலுதல்வேண்டும். அந்த முயற்சியில் வெற்றியுண்டாக ஆண்டவனது திருவருளை வேண்டி இம்மட்டில்அமைகின்றேன்.

நலம் பெருகுக.




# 'குன்றாக் குமரனர்'

( சித-சேதுராமன் )

(முன்தொடர்ச்சி)

மன்னர்: உன் அன்னையைக் கொன்றவனிடத்து இவ்வளவு அன்பா? சினங்காட்டவேண்டியஇடத்தில் இரக்கமா?

மாகினி: ஆம்; அவர் என்காதலர்-உளங்கவர்ந்த உத்தமர்.

மன்: அவன் உன் காதலனு! நீசக்கரவர்த்திதிருமகள். அவன் ஒரு போர்வீரன். பொருந்துமா-இவ்வொரப்பந்தம்? இன்று அவன் மடிவது திண்ணம்.

மாகினி: உள்ளத்தால் ஒன்றுபட்ட எங்களைப் பிரித்துவிடாதீர்களப்பா! என் உள்ளக் கோயிலுக்கு விளக்கேற்றிய உத்தமரை--என்வாழ்க்கைக்குப் புத்துயிரளிக்கும் துணைவரை - அன்பின் அவதாரத்தைக் கொன்றுவிடாதீர்களப்பா-கொன்றுவிடாதீர்கள் [தந்தையின் காலைப்பிடித்துக்கெஞ்சுகிறுள். மன்னன் உதறித் தள்ளிவிட்டுக் கொலைக்களம் செல்கிறுர். அப்பொழுது தோழி ஒருத்தி ஒரு பதக்கத்தை ராணியின் அறையிலிருந்து கண்டெடுத்ததாகக் கூறி மாகினியிடம் கொடுக்கிறுள். மடத்தின் சின்னமுள்ள அப்பதக்கத்தைக்கண்ட இளவரசி ஓடுகிறுள்தூக்கு மேடைநோக்கி.

## காட்சி-9

[குமாரனர் ஆசிரமம். தமையன் கொலைசெய்யப்படப் போவதைக் கேள்வியுற்ற தக்ஷணன் திகிலடைந்து புலம்புகிறுன்]

ஓர்மனச்சாட்சி: தக்ஷணு! உன் சகோதரன் அக்கிரமக்காரர்களின் பிடியிலே சிக்குண்டு தவிக்கிறுன்; சூழ்ச்சிக்காரர்களின் முன்னே திக்கற்று நிற்கிறுன். இரத்தபாசம் உன்னை அழைக்கிறது. நாதியற்றுநிற்கும் அவனைக் காப்பாற்றப் போ! போ! [ஓடுகிறுன்]

மற்றொருமனச்சாட்சி: எங்கே போகிறுய்! நில். யார் உன் சகோதரன் உனது குருநாதரைப் பழித்து அவர்மேல் குற்றம்சாட்டிய அவனு உன் சகோதரன். கேடுகெட்டவனே! நீ அனுதினமும்

நன்றியுடன் பூசித்துவந்த குரு-நாள்தோறும் உனக்கு உபதேசம் செய்த அந்த நல்லவரா-கொலேகாரர்? இல்லே. இல்லே.

[குருபக்தி சகோதரப்பாசத்தால் சிக்குண்டு தவித்த அவனதுஉள்ளத்தில் ரத்தபாசம் மேலிட்ட காரணத்தால் தமையனேக் காக்க ஓடுகிருன்-ஓடுகிருன்.

## காட்சி-10

[தூக்குமேடை. அரசன், குமாரனர், அமைச்சர் முதலானோர் வீற்றிருக்கின்றனர். சாம்பவன் தூக்குமேடையில் நிற்கிருன்.]

அமைச்சர்: [மக்களே நோக்கி] மன்னரின் மதிப்புக்கும் அன்பிற்கும் இருப்பிடமாயிருந்த மகாராணியார் அவர்களேக்கொன்று, அவரைத் தன்னந்தனியாக்கி, அவருடைய வாழ்வை இருளடையச் செய்ததோடல்லாமல் குருநாதரின் பக்திக்கும் மாசுபடுத்திய இப்பாவிக்கு இன்னும் சிறிது நேரத்தில் இக்கயிறு முடிவுதரப்போகிறது. (சாம்பவனேநோக்கி) கடைசிநேரம் நீ விரும்புவது யாது?

சாம்பவன்: நிரபராதியைத் தண்டிக்கும் இச்சமுதாயத்திடம் நான் ஒன்றும் விரும்பவில்லே.

அமைச்சர்: (கொலேயாளியைநோக்கி) நடக்கட்டும் காரியம்.

[அதுசமயம் எங்கிருந்தோ 'நிறுத்துங்கள்-நிறுத்துங்கள்' என்ற குரல் கேட்டுத் யாவரும் திரும்புகின்றனர். மாகினி வருகிருள்.]

மன்னன்: மாகினி! உனக்கு இங்கு என்ன வேலே?

மாகினி: வேலேயிருக்கிறகாரணத்தாலே தான் ஓடிவந்திருக்கிறேன்

[பதக்கத்தைத் தந்தையிடம் கொடுக்கிருள்.]

மன்னன்: மடத்தின் சின்னம்-குருநாதரின் அணிகலன், அந்தப்புரத்திற்கு ஏன் வந்தது?

மாகினி: ஏன் விழிக்கிறீர்கள். குருநாதர் கொலேகாரரென்று? குன்றின்குரிசில் - அன்பின் அவதாரம் - துன்பத்தின் துடைப்பு -தூய மதியுடையோன்-கொலேகாரரல்ல என் குருநாதர் என்று மார்தட்டிப் பேசினீர்களே! மகிமை புரிந்துவிட்டதா?

[இதுசமயம் குமாரனரின் உடல் நடுங்குகிறது. நழுவி ஓடுகிருர்.

(14ம் பக்கம் பார்க்க)

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

உரையாசிரியரது கருத்துக்கள்தான் பிரதிபலிக்கும். (பலத்த கைதட்டல்)' (10-9-55 தினமணி) என்கிறார்நவீனர். சிவஞான முனிவரர், சேனாவரையர், பரிமேலழகர் முதலிய உரையாசிரியன்மார் மகாபண்டித சிரோன்மணிகள், மூலங்களிற் புதைந்துகிடக்கின்ற நுணுக்கங்கள் பலவற்றையெடுத்து வெளியிட்ட பேருபகாரிகள், தமிழுக்கு ஆக்கமளித்த தயாமூர்த்திகள். அவருரைகள் தம்மளவிலேயே பேரிலக்கியங்களாகத் திகழ்கின்றன. அங்ஙனமாக அவரையும் அவருரைகளையும் சாமானிய உரையாசிரியன்மாரோடும் அவருரைகளோடும் சேர வைத்து நிந்தித்தார் நவீனர். அது தமிழ்க்கொலை, நன்றிமறந்த செயல். அதற்குக் கைதட்டல் வேறு. அக்கூட்டத்தின் தரமும் அதனாற் புலப்படும். அதுகிடக்க. உரையாசிரியன்மாரையும் உரைகளையும் ஒதுக்குக எனச்சொல்லிவிட்டுப்பெயர்ப்பாசிரியன்மாரையும் பெயர்ப்புக்களையும் நம்புக என அவர் சொல்லலாமா? பெயர்ப்புக்களில் மாத்திரம் பொருள் பிசகாதோ? உரையாசிரியன்மாரையும். உரைகளையுங் கீழ்ப்படுத்துமுகத்தால் பெயர்ப்பாசிரியன்மாரையும் பெயர்ப்புக்களையுங்கூட அவரே கீழ்ப்படுத்தியவராகிறார். மக்கள் மூலங்களை மதித்துக் கற்கவேண்டுமென்பதே சிறந்த உரையாசிரியன்மார், பெயர்ப்பாசிரியன்மாரின் விருப்பமென்க.

இவையெல்லா மருமறையாகமத்தே யடங்கியிடு மவையிரண்டு மரனடிக்கீ ழடங்கும்', 'அருமறையா கமமுதனூலனைத்துமுரைக் கையினலளப்பரிதாம்...சுருதிசிவாகமமொழியச் சொல்லுவதொன் றில்லை சொல்லுவார் தமக்கறையோ சொல்லொணாதே', 'வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள் வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்தநூல்களாதிநூ லனாதி யமலன் றருநூல்' என்றது சித்தாந்த சாத்திரம். அவை யிரண்டும் 'ஆரியமாய்' என்றதால் சம்ஸ்கிருதம்.

பிரதேச மொழிகளிலுள்ள பிற சைவ நூல்களெல்லாம் அவ் வேதாகமங்களின் வழிவந்தனவே. சிவம், சங்கரன், சம்பு, ருத்ரன், ஹரன் முதலிய சைவசமய தெய்வநாமங்களும் சம்ஸ்கிருதமே. சைவம், சைவசமயம், வைதிகசைவம், சைவசித்தாந்தம் என்ற அச் சமயப்பெயர்களும் அம்மொழிதான். சைவ மந்திரங்களும் அம்மொழியிற்றுளுள. அங்ஙனமாக அம்மொழி சைவசமயத்துக்குரிய மொழியெனச் சொல்வது சரி. அது உள்ளதை உள்ளபடி சொல்வதாகும். அம்மொழியிலுள்ள சைவநூல்களை அம்மொழிப்பயிற்சி பெற்றோ, பிறர் அம்மொழியிலேயே படிக்கக் கேட்டோ மகிழ்வதற்கு மனம் வேண்டும். அஃதில்லாத சைவன் தவமில்லாதவனே. அச் சைவன் அவ்வின்மையையுணர்க, எண்ணியெண்ணிச் சாகும்வரை கவலவாவது செய்க.

சிலபேருக்குச் சுட்டுப்போட்டாலும் சம்ஸ்கிருதம் தெரியாமலிருக்கலாம், சரியாக உச்சரிக்கத்தெரியாமலிருக்கலாம், ஆயினும் சம்ஸ்கிருதத்தில் ஓதினுல்தான் மனநிறைவு உண்டாகிறது. அது குருட்டுப்பற்று, மூடநம்பிக்கை, என்கிறூர் விநோபா. அதைப்பற்றி இன்னுங் கொஞ்சஞ் சொல்லுகிறேன். சமயாபிமானமே சிறந்த தருமம். அக்காரணத்தாலேயே அச்சிலருக்கு அம்மொழியையோதிக் கேட்பதில் மனநிறைவுண்டாகிறது. அம்மனநிறைவு கலங்காத, எளிதிற் கிடைக்கக் கூடாததோரடிப்படை. அதை வைத்துக்கொண்டு அம்மொழிநூலை மேலும் அவருக்கு ஓதிக் கேட்பித்து அவரை அம்மொழிப் பயிற்சியில் ஈடுபடுத்தலாமே. வெறுந் தாய்மொழியைப் பயிலத் தொடங்குபவனும்முன்னமே பயின்று வல்ல தமிழ்க்கலைஞர் பலகால் ஓத அதனைக்கேட்டு அதில் ஆசையுண்டாகித்தான் தன் பயிற்சியைத் தொடங்குகிறுன். தமிழிலுள்ள சைவநூல்களையே ஓதிக்கேட்டு மனநிறைவுண்டாகப் பெருத தமிழரே மிகப்பலர். அவரிடம் சைவப்பயிற்சி சூனியம். ஆகலின் அச்சிலபேருடைய மனநிறைவைப்புரிந்துகொள்ளவும், சம்ஸ்கிருதப் பயிற்சிக்குச் சாதகமாக்கவும் முற்படாமல் குருட்டுப்பற்று, மூடநம்பிக்கை யெனக் கூறி விலக்குதல் பெருங்குற்றம். அது அவரது சமயாபிமானத்தையுங் கெடுக்கும்.

(12ம் பக்கம் பார்க்க)



உ
சிவமயம்
பாலருவாயர் துணை

'அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறை நிற்கும் நிறைந்து'.

சந்தா:
உள்நாடு ரூ—3
வெளிநாடு ரூ—6

செட்டிநாடு

துன்முகி கார்த்திகை-14

# பிள்ளையார் நோன்பு

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் கொண்டாடி வருகின்ற நோன்புகளில், தலைசிறந்ததாகக் கருதப்பெறுவது பிள்ளையார் நோன்பு ஆகும். தமிழர்களின் தனிப்பெரும் நோன்பாகிய தைப்பொங்கலைவிடப் பிள்ளையார் நோன்பைப் பெரிதாக மதித்துக் கொண்டாடுவது, தனவணிக மக்களிடையே தொன்றுதொட்டு நிகழ்ந்து வருகின்றது. இதனை "பொங்கல்- பிள்ளையார் நோன்பு" என்று இவவிரண்டனையும் தொடர்புபடுத்தி இந்நாட்டில் வழங்கி வருவது கொண்டு அறியலாம்.

நகரத்தார்கள் மரகதவிநாயகரைக் குலதெய்வமாகக் கொண்டவர்கள். இவர்களுக்கு இப்பிள்ளையார் வழிபாடு சரித்திர காலத்திற்கு வெகு நாட்கள் முந்தியே தொடங்கியிருக்கிறதென்பதற்குப் பல சான்றுகள் இருக்கின்றன. இவர்கள் பாண்டியநாட்டிற் குடியேறி ஏறக்குறைய எண்ணூறு ஆண்டுகள் ஆகின்றனவென்பதும், அதற்கு முன் பல நூறாண்டுகள் சோழநாட்டில் வாழ்ந்திருந்தார்களென்பதும், அதற்குப் பல நூறாண்டுகள் முன்பிருந்தே மரகதவிநாயகர் வழிபாடு இவர்களிடம் இருந்துவருகிறதென்பதும் நகரத்தார் சரித்திரத்தால் அறியப் பெறுகின்றன.

விநாயகப் பெருமானுக்குரிய விசேட நாட்களில் ஆவணிமாதத்துப் பூருவ பக்கச் சதுர்த்தியும் மார்கழி மாதத்துச் சதயங் கூடிய சட்டியும் மிகச் சிறந்தவை. இவற்றுள் விநாயகசதுர்த்தி நோன்பு, எல்லாராலும் கொண்டாடப்பெறுவது. மார்கழிச் சட்டிநோன்பு, நகரத்தார்களாலும் வேறுசில மரபினர்களாலுமே கொண்டாடப்பெற்றுவருகின்றது.

மாதங்களில் சௌரமானம் சாந்திரமானம் என இருவகையுண்டு. சூரியனை வைத்துக் கணக்கிடுவது சௌரமானம்- சந்திரனை வைத்துக் கணக்கிடுவது சாந்திரமானம். பிள்ளையார்நோன்பு சாந்திரமானமுறையில் மார்கழிச்சட்டியில் கொண்டாடப்பெற வேண்டுமேன்பது விதி.

ஒவ்வோரு அபர பக்கப் பிரதமையிலும் தோடங்கிப் பௌர்ணிமையில் சாந்திரமானம் முடியும். அந்த முறையில சௌரமான முறையாகக் கணக்கிடப்பெற்றுள்ள கார்த்திகை மாதத்து அபரபக்கப்பிரதமை, சாந்திரமான முறைக்சணக்குப்படி மார்சழிமாதத்து முதல் நாளாகும்.

பிள்ளையார் நோன்பு திருக்கார்த்திகை (பௌர்ணிமை) யன்று தோடங்கப்பெற்று இருபத்தோன்றும்நாளில் (பூருவசட்டி) நிறைவு செய்யப்பெறுவது. இவவாண்டில் சௌரமானமாகிய கார்த்திகை மாதத்தில் 23உ, சாந்திரமானமாகிய மார்கழிச் சட்டியாதலாலும், அந்த நாளே திருக்கார்த்திகையை யடுத்த இருபத்தோன்றும் நாளா தலாலும் அதுவே பிள்ளையார் நோன்பு நோற்கவேண்டிய பெரு நாளாகும். இதுபற்றி நமது 23-8-56 இதழிலும் தேரிவித்திருக்கிறேம். சித்தி திருவோடு முத்தி தருகின்ற முதற்கடவுளை 8-12-56 பிள்ளையார் நோன்புநாளில் முறைப்படி வழிபட்டு வாழ்வை அடைவோமாக.

(9ம் பக்கத் தொடர்ச்சி)

'ஒரு பாடலின் பொருளை அறியவேண்டும். அதனைச் சிந்திக்க வேண்டும்... குருட்டுத்தனமாக உருப்போட்டு ஒப்பிப்பதால் கொஞ்சங்கூடப் பயனில்லை. அப்படி ஒப்பித்து அதனால் பிறரால் தகுதியுடையான் என்று மதிக்கப்படவேண்டும் என்று விரும்புவது ஒழுங்கற்றது என்றுகூட நான் நினைக்கிறேன். இவ்வளவு இலேசாகப் பிறரது மதிப்பைப் பெற்றுவிடவேண்டும் என்ற விருப்பந்தான் சமயம் சீரழிந்து போனதற்குக் காரணம்' (24-4-56 தமிழ்நாடு) என்கிறாராம் விநோபா. அவ்வாக்கியம் தாய்மொழிவழிபாட்டைத் தூக்கிப்பிடிக்கிறதென்பது நவீனர் கருத்து, பொருளையறியவேண்டும், சிந்திக்கவேண்டும் என்பதை எவரும் மறுக்கவில்லை' குருட்டுத்தனமாக உருப்போட்டு ஒப்பிப்பதால் கொஞ்சங்கூடப் பயனில்லை யென்பதுதான் தப்பு. வேதத்துக்குச் சுருதியென்பது மொருபெயர். அந்நூல்கேட்டுக் கேட்டுக் குருட்டுத்தனமாக உருப்போட்டு வழிவழியாக ஒப்பிக்கப்பட்டு வந்ததாற்றான் அப்பெயர் வந்தது. விநோபா பார்ப்பனராயிருந்தும் அப்பெயர் வரலாற்றை மறந்தார். சகவாசதோஷம் போலும். உருப்போடுவதற்கு ஏற்றபருவம் இளமையே. ஆனால் அப்போது பொருளை யறிவதுஞ் சிந்திப்பதும் சிரமந்தான். ஆயினும் அப்பருவத்திற்றான் வேதாத்யயனந் தொடங்கப்படும். பார்ப்பன இளைஞர் அதனை உருப்போடுவதை அவர் பரிகசிக்கிறார். பழங்காலத்தில் அவர் உருப்போட்டுக் காப்பாற்றியதால் வேதம் இன்று நமக்கு எழுத்து வடிவிற் கிடைப்பதாயிற்று. அது பயனில்லையா? அல்லது சாமானிய பயனா? அஃதிருக்கட்டும். திருக்குறளில் 'அகரமுதல' எனத் தொடங்குவது முதற் குறள். அது இப்போது பாடசாலைகளில் 3ஆவது 4ஆவது வகுப்பு முதல் பி-ஏ வரையும் பாடமாக வைக்கப்பட்டிருக்கிறது. பி-ஏ, எம்-ஏ வகுப்பு மாணவனாலும் எளிதில் விளங்கிக்கொள்ள முடியாததொரு பொருள்சேர் விரிவுரையைத் 'திராவிடப் பிரகாசிகை' யென்னும் நூலில் தந்துள்ளார் சபாபதிநாவலர். 3ஆவது வகுப்பு மாணவன் தன்பக்குவத்தளவில் மு-வாத ராசனருரைபோன்றதோருரையையுங் குறளையும் படிக்கிறான். அவன் அக்குறளின் விசேடவுரையை யறிந்தவனா? சிந்தித்த

வனு? இல்லை. அவன் அக்குறளை மனப்பாடம் செய்யக் கூடாதோ? அந்நாவலரின் விரிவுரையை யறிந்து சிந்தித்தபிறகு தான் அது செய்யவேண்டுமோ? விநோபாவின் உபதேசம் விநோதமாகவே யிருக்கிறது. அவர் கருதுகிறபடி குருட்டுப் பாடமென்பது இல்லவேயில்லை. கேட்டுப் படிப்பவன் குருடன், பார்த்துப்படிப்பவன் செவிடன் என அவர் கருதினர்போலும். அவர்கூறுங் குருட்டுப்பாடத்தால் எவனும் மதிப்புப்பெறவிரும்ப மாட்டான். அப்படி விரும்பினதால் சமயம் சீரழிந்துபோயிற் றென்பதும் உண்மைக்கு மாருகும். எங்கோ அடிக்கப் பல்லுப் போயிற்றும். தென்னைமரத்தில் தேள்கொட்டப் பனைமரத்தில் நெரிகட்டியதாம். சமயஞ் சீரழிந்ததற்கு அவர்கூறிய காரணம் அப்படித்தானிருக்கிறது. மொழிவெறியும், சமயநூல்களைக் கல்லாமையும், சமய பிரமாண நூற் பொருளைமாத்திரம் எடுத்துக் கொண்டு ஆப்த வாக்கியங்களாகிய அந் நூற்களைப் போற்றி யொழுகாமையும், அன்னபிறவுமே அச்சீரழிவுக்குக் காரண மென்பதை அவரறிய வேண்டும்.

'அவர்(விநோபா) தொடர்ந்து கூறும்போது ஒருவரது ஆன்மவளர்ச்சிக்கு அவரது சொந்தத் தாய்மொழி போதாது என்று கூறுவதைத் தான் ஒப்புக்கொள்ளமுடியாது என்ருர். தாய்மொழி ஒன்றே முற்றும் போதுமானது என்பது அவர் கருத்து. ஆகவே, ஆன்மஞானம் சில குறிப்பிட்ட மொழிகளில் மட்டுமே பூட்டிவைக்கப்பட்டிருக்கிறதுஎன்ற முடநம்பிக்கையை ஒழித்துவிடுங்கள் என்று கேட்டுக்கொண்டார்' (24.4-56 தமிழ் நாடு) என்கிருர் நவீனர். விநோபா கருத்து எதுவேனுமாக. நவீனர் கருத்தே அதுதான். மொழிக்கும் ஆன்மவளர்ச்சிக்கும் சிறிதும் சம்பந்தமில்லை. அவ்வளர்ச்சிக்குச் சமயமே துணைபுரி யற்பாலது- மொழிக்கும் சமயத்துக்கும் வேறுபாடு தெரியாத தோஷமே அவர் கூற்றுக்குக் காரணம். இன்னும் சமயங்களுட் சைவமொன்றே அவ்வளர்ச்சிக்கு உறுதுணை. அதன் பிரமாண நூல்கள் முதலில் சம்ஸ்கிருதத்திற்ருன் உளவாயின; அவற்றைத் தழுவிப் பின்னர்த் தமிழிலும் பெருகின-

(தொடரும்)

(7ம் பக்கத் தொடர்ச்சி)

எதிரே ஓடிவந்த தக்ஷணன் அவரைப் பிடித்து இழுத்து வருகிறான்]

மன்னன்: நிரபராதி சாம்பவனை விடுதலை செய்யுங்கள். இத் துரோகியை-நெருப்பினும் கொடியவனை - மானிடப் பதரைத் தூக்கிலிடுங்கள். இவனைப்போன்றவர்களை நாட்டில் நடமாட விடுவதே தவறு. [குமரனார் தூக்கிலிடப்படுகிறார். சாம்பவன் விடுதலைபெறுகிறான். மன்னன் சாம்பவனுக்குத் தன் மகள் மாகினியை மணம் முடித்துவைத்து அவனை அந்நாட்டுக்கு மன்னனாக நியமிக்கப்படுகிறான் [இந்நாடகம் இல்லோன் தலைவனாக இல்லது கூறியது.] முற்றும்.

---




லெட்சுமிபுரம் திரு, ந. சொ. அரு. அருணாசலன்செட்டியாரவர்கள் செல்வன் சொக்கலிங்கம் (செல்வமுத்துக்குமார் B E)க்கும் பூலாங்குறிச்சி திரு மு. சு. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் செல்வி விசாலாட்சி (தனலெட்சுமி B A)க்கும் 14-11-56ல் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

இட்டமொழி பஞ்சாங்க கணிதர் திரு, சிவசூரியநாராயண பிள்ளையவர்களின் செல்வன் சுந்தரத்துக்கும் திசையன்விளை திரு மா. சுடலையாபிள்ளை அவர்களின் செல்வி வீர லெட்சுமிக்கும் 15-11-56ல் திருமணம் நடைபெற்றது.

மணமக்கள் மக்களோடு மகிழ்ந்து மனையறங்காத்து நெடிது வாழ ஆண்டவனை வேண்டுகிறோம்.

---

## நோட்டீஸ்

புதுக்கோட்டை சப்கோர்ட்

S. C. 174 of 56

நாச்சம்மைஆச்சி—வாதி

ராங்கியத்திலிருந்து தற்காலம் மலேயாவிலிருக்கும் பெ. வயி. மு. முத்தையாசெட்டியார்—பிரதிவாதி

வாதியால் உமது பேரில் புரோநோட்டுப்படி ரூ 766-2-6 கிடைக்கவேண்டி தாவா செய்யப்பட்டு 1-12-56உ டயம் ஏற்பட்டிருக்கிறது. அன்று நீர் புதுக்கோட்டைசப்கோர்ட்டில் ஆஜராகி உமதுகக்ஷிகளைத் தெரிவித்துக் கொள்ளவேண்டியது. தவறினால் உம்மை யன்னியில் முடிவுசெய்யப்படும்.

புதுக்கோட்டை
6-11-56

S. வைத்தியநாத சாஸ்திரிகள்
அட்வகேட்

## மெய்கண்டதேவர்

ஸ்ரீ மெய்கண்ட தேவரின் இவ்வருடக் குருபூஜை விழா நன்னெறி மன்றத்தின் சார்பில் சுசீந்திரம் திருவாவடுதுறை யாதீன மடத்தில் 2-11-56 வெள்ளிக்கிழமை மாலை சிறப்புடன் நடைபெற்றது. வெள்ளிமலை ஸ்ரீலஸ்ரீ சுவாமிசத்தியானந்தா தலைமை தாங்கினர். திருமுறையோதல், தியானம், பஜனை, நன்மொழி வழங்கல், மௌனம் ஆகிய நிகழ்ச்சிகள் வழக்கம்போல் நடைபெற்றன. பஜனை வேளையில் சுசீந்திரம் தேவாரப்பாடசாலை ஆசிரியர் சிவசுப்பிரமணியபிள்ளை அவர்களும், மாணவிகளும் தேவார இன்னிசை இசைத்தனர். வித்துவான் வே. பூதலிங்கம் பிள்ளை, சைவப்புலவர் பி ஏ நடேசபிள்ளை சித்தாந்த ஆசான இ. பகவதிப்பெருமாள்பிள்ளை சிவநெறிக்குரிசில் பி ஆறுமுகம்பிள்ளை முதலியோர் மெய்கண்டதேவர் பற்றிச் சிறந்த சொற்பொழிவுகளாற்றினர். உள்ளூர் வெளியூர்களிலிருந்து பல அன்பர்கள் கலந்துகொண்டனர். நண்பகலில் நமசிவாயமூர்த்திக்கு விசேஷ பூசனை நடைபெற்றது.

# பழைய ஆதாரவுகள்

(முன்தொடர்ச்சி)

சிவகெங்கைஜமீன்தாரி இலாகாவில் எங்கள் குலதெய்வங்க
ளாகிய இளையாத்தக்குடி கோவில் க. இரணியூர்க்கோவில் க.
பிள்ளையார்பட்டிக்கோவில் க வைரவன்கோவில் க. மாத்தூர்
கோவில் க. இலுப்பக்குடிகோவில் க. நேமங்கோவில் க. சூராக்
குடியில் தேசிகவிநாயகர்கோவில் க. வேலங்குடியில் கண்டீஸ்பர
முடையார்கோவில் க. மாயாண்டிசெட்டி கோட்டூர் நயினார்
கோவில் க. சுப்பிரமணியஞ்செட்டி இடையன்வயல் திருக்குளத்
தங்கரையில் பிள்ளையார்கோவில் க. சின்னான்செட்டி வேங்கா
வயல் திருக்குளத்தங்கரையில் பிள்ளையார்கோவில் க. முத்து
கருப்பன்செட்டி சிறுவயல் திருக்குளத்தங்கரையில் பிள்ளையார்
கோவில் க. எங்களுக்கு உபதேசம் செய்கிற பாதரக்குடி மடம்
க. துளாவூர்மடம் க. குன்னக்குடியில் காடன்செட்டிமடம் க.
மேல் எழுதிய கோவில்களுக்கும் மடங்களுக்கும் ஜமீன்தார்இலா
காவில் நடந்துவருகிற கிராமங்களுக்கு சர்க்காரில் யேற்பாடாயி
ருக்கிற பொருப்பு பணத்தைமட்டும் நாங்கள் கொடுத்து ௸
கோவில்மடம் வகையறாக்களை நாங்கள்தானே எங்கள் முன்
னோர்கள் நாள்முதல் நாளதுவரையில் விசாரணை செய்து ௸
கிராமங்களில் வருமான ஆமிஷங்கள் சொல்பமாயிருந்தபோதி
லும் அத்துடனே எங்கள் சொந்தத்திலிருந்து வெகுபணங்கள்
கொடுத்து ௸ கோவில்கள் மடங்கள் வகையறாவில் பூசை
நைவேத்தியம் திருப்பணி தடாகபிரதிஷ்டை அன்னதானம்
முதலான தர்ம்மங்கள் நடப்பிவித்து வருவதில் மேல் எழுதிய
கோவில்கள் மடங்களுக்கு ஒரு நாளிலும் சர்க்காரிலிருந்து மணி
யம் சம்பிருதிகள் நேமியாமல் நாளதுவரையில் நடந்து வந்தி
ருக்க அதற்கு விரோதமாய் இப்போது ஜப்தியில் ௸ சீமை
தேவஸ்தானம் அமல்தார் மேலெழுதிய கோவில்கள் மடம்வகை
யறாவுக்கு மாமூல் வழக்கத்துக்கு விரோதமாய் மணியம் சம்பிரு
திகளை நேமித்து தொந்திரவுசெய்கிறதில் அது சங்கதியைக்
குறித்து௸ஜமீன்தாரவர்களிடத்தில்அரியப்பண்ணிக்கொண்ட
தில் பிறுக்கு வருஷம் வரையில் நடந்துவந்த வழக்கப்படிக்கு
பொருப்பு பணத்தை மாத்திரம் வாங்கிக்கொண்டு எங்கள் குல

தெய்வமாகிய கோவில்கள் மடங்களுக்கு மாமூலுக்கு விரோத மாயிப்போது நூதனமாக சர்க்காரில் நேமித்திருக்கிற மணியம் சம்பிருதிகளை வாங்கிவரும்படியாயும் ஜமீன்தாரியின்ஹெட்தாசில் தார் பேருக்கு உத்திரவாகவேண்டியதாய் நாளது ஹூ மேமீ த் தில் அர்ஜ்ஜி எழுதியிருக்கிறார். மேலெழுதிய கோவில்கள் மடங் கள் வகையரு தர்ம்மங்களுக்கு கணக்குகளைப் பார்க்கிறது எங் கள் ஜாதிவழக்கமில்லாததினாலே இது சங்கதியைக் குறித்து மேமீ 7உயில் உசூரில் கொடுத்த விண்ணப்பத்துக்கு நாளது வரையிலும் யாதொரு உத்திரவும் கிடையாதுனாலேயும் தர்ம துரையவர்கள் கயவுசெய்து 1817 ஹூத்தில் உண்டான 7-வது சட்டப்பிரிவுகளின் பிரகாரம் மாமூலுக்கு விரோதமில்லாமல் ஷெ தர்மங்களுக்கு நாங்கள் தானே பாத்தியமாயிருந்து நடப்பி வித்துக் கொண்டுவரும்படியாயும் இப்போதுஷெஅமல்தாரினாலே நூதனமாய் நியமித்திருக்கிற மணியம் சம்பிருதிகளை வாங்கி வைக்கும்படியாயும் உத்திரவாகவேணுமென்று மனுப்பண்ணிக் கொள்கிறேன்.

1832ஹூ சூன்மீ 25உ வெங்கிடாசலம்செட்டி என்றும் தமி ழில் கையெழுத்துவைக்கப்பட்டிருக்கிறது. இது எழுதினது சேஷகிரி ருவ் காப்பிரைட்டு என்றும்.

[கலெக்டரவர்களால் சாரி. சாரிதாக்கிதைக்கு நகல். மதுரை ஜில்லா கலெக்டர் துரையவர்களாபீசிலிருந்து 1832ஹூ சூலைமீ –த்தில் அனுப்பப்பட்டிருக்கிற தாக்கிதை நகல்பதிவு புஸ்தகத்தி லிருந்து எடுத்து எழுதியது.]

நிம்பர் 18. 9உ சிவகெங்கை ஹேட்டுதாசில்தார் ஷெ ஜமீன் தாரிலாகாவிலிருக்கிற நாட்டுக்கோட்டை இளையாத்தக்குடி நகர செட்டிகள் குலதெய்வமாகிய இளையாத்தக்குடி கோவில் க. இர ணியூர்க்கோவில் க. பிள்ளையார்பட்டிக்கோவில் க. வயிரவன் பட்டிக்கோவில் க. மாத்தூர்க்கோவில் க. இலுப்பைக்குடிக் கோவில் க. நேமம்கோவில் க. வேலங்குடி கண்டீஸ்பரமுடை யார்கோவில் க. சூரக்குடியில்தேசிகவிநாயகர்கோவில்ஷெசெட்டி

களுக்கு குருஸ்தானமாகிய பாதரக்குடிமடம் க. துளாவூர்மடம் க மாயாண்டிசெட்டி தனதில் கோட்டூர்நயினார்கோவில் க காடன் செட்டி தனதில் குன்னக்குடிமடம் க. சுப்பிரமணியஞ்செட்டி தனதில் இடையன்வயல் திருக்குளத்தங்கரை பிள்ளையார் கோவில் க முத்துக்கருப்பன்செட்டி தனதில் சிறுவயல் திருக்குளத்தங்கரை பிள்ளையார் கோவில் இந்தக் கோவில்கள் மடங்களுக்கு ஷிஜமீன்தாரி இலாகாவில் நடக்கும் கிராமங்களுக்கு சர்க்காருக்குள்ள பொருப்பு ஜோடுத்து ஷி கோவில் கிராமங்கள் வகையறாவை ஷிசெட்டிகள் தானே விசாரணை செய்துகொண்டு கிராமத்தில் வருகிற ஆமிஷங்கள் தவிர அவாள்சொந்தத்திலும் ருந்து பணங்கள் சிலவுசெய்து திருப்பணி முதலான மஹமத்து பூஜை படித்தாமும் தாழ்வில்லாமல் நடப்பிவித்து வருகிறதாயும் அதற்கு இப்போது தேவஸ்தானம் அமூல்தார் மாமூலுக்கு விரோதமாய் மணியம் சம்புருதி நேமித்து கணக்கு கேழ்காமலி ருக்கும்படிக்கும் ஷி செட்டிகள் மாமூல்படிக்கு தர்ம்மம்நடப்பி வித்துக்கொள்ளும்படிக்கி உத்திரவாக வேண்டியதாய் சிவ ஙெங்கை ஜமீன்தார் எப்ரல்மீ 30உ அர்ஜியில் அரிக்கை செய் திருப்பதனாலேயும் ஷிசெட்டிகளும் தங்கள் கோவில் மடம் வகையறாவை தங்கள் வசம் விட்டுவிட வேணுமென்று மாமூல்ப்படிக்கு தர்ம்மம் நடப்பிவிக்கிறதாயும் விண்ணப்பம் கொடுத்து அறியப்பண்ணிக் கொண்டதினாலேயும் மாமூல்ப்படிக்கு ஷிநகரச் செட்டிகளுடைய மேலெழுதிய கோவில் மடம் வகையறாவையும் அதின் கிராமங்களையும் மணியம் வகையறா நேமிக்காமல் அவாள்வசமாகத்தானே சாரிசெய்து உள்ள பொறுப்புமட்டும் வசூல்செய்யும்படி திட்டம் பண்ணவும்.

---

## பயிற்சி வகுப்பு

பல்வேறு ராஜ்யங்களில் உள்ள கஸ்தூரிபாய் காந்தி ஞாபகார்த்த ஸ்தாபனத்தைச் சேர்ந்த 20 நிலையங்களில், ஒரு வருஷ பயிற்சி வகுப்பில் தற்போது மொத்தம் 909பேர்கள் கிராம சேவிகைகளாகப் பயிற்சி பெற்றுவருகின்றனர்.

## புதிய சென்னை மாநிலம்

கேரளா ராஜ்யத்துக்குச் சில பிரதேசங்களைக் கொடுத்து வாங்குவதன் மூலமும் புதிய மைசூர் ராஜ்யத்துக்குச் சில பகுதிகளைக் கொடுத்துவிடுவதன் மூலமும் சென்னை ராஜ்யத்தின் பொருளாதாரத்தில் விசேஷ மாறுதல்கள் ஏற்பட்டுவிடமாட்டாவென்றுஎதிர்பார்க்கப்படுகிறது.எல்லையோரங்களிலுள்ளசிலகாட்டுப்பகுதிகள் அதற்கில்லாமற் போகும். ஆனால் அரிசி, உப்பு, தோரிய மணல் முதலியவை உற்பத்தியாகிற தாலுகாக்கள் அதற்குக் கிடைக்கும். அந்தத் தாலுகாக்கள் சென்னை ராஜ்யத்தில் புதிய கன்னியாகுமரிஜில்லாவாக அமையும். சீரமைப்புக்குப் பின், சென்னை ராஜ்யத்தின் விஸ்தீரணம் 50,110 சதுரமைல் அதன் ஜனத்தொகை சுமார் 300லட்சம்.

சென்னைராஜ்யம் இப்போது அதிகமாய்த் தொழிலபிவிருத்தி உள்ளதல்ல. தென்னாற்காட்டிலுள்ள பழுப்பு நிலக்கரித்திட்டம் தான் அதன் பிரதான அபிவிருத்தியேற்பாடாகும். அதற்கு மொத்தம் 68.8 கோடிரூபாய் செலவிடவேண்டும். 35லட்சம்டன் நிலக்கரி வீதம் உற்பத்தியாகுமென்று எதிர்பார்க்கப்படுகிறது

சென்னை ராஜ்யத்தில் மேட்டூர், பைக்காரா, மோயார், பாபநாசம் மின்சாரத் திட்டங்கள் முக்கியமானவை. பெரியாறு, குண்டாத்திட்டங்கள் சமீபத்தில்மேற்கொள்ளப்பட்டன. அவை பூர்த்தியானபின், 2,85,000 கிலோவாட் சக்தி உற்பத்தியாகும். சென்னைராஜ்யம் ஓரளவு நகர்ப்புற அம்சமுள்ள ராஜ்யமாகும். நடுத்தர, பெரிய அளவு கிராமங்கள் ஒன்றாக இணைந்துநெருங்கிய தொகுதிகளாக இருக்கின்றன.

## ஆதாரப் பள்ளிக்கூடங்கள்

இந்தியாவில் ஆதாரப் பள்ளிக்கூடங்களின் எண்ணிக்கை 1950-51ல் 33,730ஆக இருந்தது 1955-56ல் 41,124 ஆக அதிகரித்தது.





தேவகோட்டை கந்தர்சஷ்டி விழாக் கழகத்தில் ஏழு ஆண்டுகள் செயலாளராயிருந்தும் தோடக்கம்முதல் இடைவிடாது தோண்டாற்றியும் வருகின்ற

ஸ்ரீ சோம. இராமநாதன் செட்டியார்



## கீழஆம்பூர்

இவ்வூர் செங்கோல்மடம் ஆதீனம் ஸ்ரீ மீனுக்ஷி உயர்தர ஆரம்பப் பாடசாலையில் நேருவின் பிறந்தநாள் விழா நவ-19உ தலைமைஆசிரியர் காசிவிசுவநாதன் தலைமையில் நடந்தது. ஆசிரியர் பொன்னையாபிள்ளைபேசினர். மாணவமாணவிகளின்கோலாட்டம் கும்மி ஆடல்பாடல்கள் நடைபெற்றன. ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக சுந்தரசத்தியஞானபரமாசாரியசுவாமிகள்விழாவிற்குஎழுந்தருளி அருளுரை வழங்கினர்கள்.

## சிவபதமடைந்தார்கள்

கோயமுத்தூர் சிவக்கவிமணி திருமுறை ஞானபாநு C. K. சுப்பிரமணியமுதலியாரவர்களின் மனைவியார் திருமதி மீனுக்ஷி அம்மாளவர்கள் 11-11-56 இரவு 7மணிக்குச் சிவபதம்அடைந்தார்கள். அவர்களது நல்லுயிர் சிவானந்தத்தில் திளைத்து இன்புறுவதாக.

## குழந்தைகள் நாள்

பாப்பான்குளம் நவ 19- இவ்வூர் செங்கோல்மடம் ஆதீனம் ஸ்ரீ அரங்கநாத உயர்தர ஆரம்பப்பாடசாலையில் நேருவின் பிறந்நாள்விழா திரு, A. குத்தாலலிங்கம்பிள்ளை தலைமையில் சிறப்பாக நடந்தது. பண்ணையார் ராமபுத்திரஐயர் பி கே கணபதிமுதலியார் மாணவமாணவிகள் சொற்பொழிவாற்றினர்கள். கோலாட்டம் கும்மி நாடகம் நடைபெற்றன.

